கழக வெளியீடு—௪௧௨

# இலக்கியச் சிறு கதைகள்

## நான்காம் பகுதி





ஆசிரியர்கள் :

பண்டித-வித்துவான். மி. பொன். இராமநாதஞ் செட்டியார்
சு. அ. இராமசாமிப் புலவர்







திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட்
திருநெல்வேலி : : சென்னை

# நூன்முகம்

இறைவன் எங்ஙனம் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய் இலங்குகின்றானோ அங்ஙனமே நம் தாய்மொழியாகிய தண்டமிழ் மொழியும் உலகத்தொன் மொழிகள் பலவற்றுள்ளும் தொன்மையுட்டொன்மை மிக்கதாய்த் துலங்குவதொன்றாகும். இவ்வுயர்தனிச் செம்மொழியில் இருந்த எண்ணிறந்த நூல்கள் காலவேறுபாட்டாலும், கடற்கோள் முதலிய பிறவேறு காரணங்களாலும் இறந்துபட்டனவெனினும் இன்றுள்ள எஞ்சிய நூல்களைக்கொண்டே இதன் பழமை, பெருமை, பண்பாடு முதலியவற்றை நன்குணரலாகும்.

முருகப்பெருமான் என்றும் இளையனாய் இலங்குதல் போல என்றும் பொன்றா இளமையோடு, இன்றும் கன்னித்தமிழா யிலங்கும் இக்கவின்மிகு மொழியில் மொழியப்பெற்றுள்ள இயற்கையின் எழில், இறைவழிபாடு, அன்பின்மாட்சி, வன்பமைவீரம், மக்கட்பண்பு, கற்பனைத்திறம், ஒழுக்கம், நீதிபோன்ற உயரிய கருத்துக்களெல்லாம் செய்யுளிலேயே செய்யப்பெற்றிருத்தலும் அச்செய்யுட்களுள்ளும் ஒருசிலவேயன்றிப் பிறவெல்லாம் கற்றுவல்ல புலவரானன்றி மற்றையோரால் அறியப்படாத அருமைப்பாடுடையனவாயிருத்தலும் அருந்தமிழறிஞர் அனைவரும் நன்கறிவர். ஆகவே, அரசியல், வாணிகம், ஆலைத்தொழில் போன்ற பல அலுவல்களில் தலையிட்ட அறிஞர்களும் இளைஞர்களும், பிறபொதுமக்களும் தமிழிலுள்ள அரும்பொருள்களை யெல்லாம் எளிதில் அறிதற் கியலாதவர்களாய் இன்னல் உறுவதோடன்றி 'இம்மொழி கடினமுடையது' என வெறுக்கவும் தொடங்குகின்றனர்.

இவ்வுண்மையை உணர்ந்த கழகமுகவராகிய, திரு. வ. சுப்பையாபிள்ளையவர்கள் தமிழ்ச் செய்யுட்களிலுள்ள அரும்பொருள்களையெல்லாம் யாவரும் எளிதி

லுணர்ந்து இன்பம் துய்க்குமாறு அவற்றைச் சிறுகதை யுருவில் எழுதி வெளியிட விரும்பித் தம் விருப்பத்தை எம்மிடம் அறிவித்தார். யாமும் அங்ஙனம் செய்தலே அனைவர்க்கும் பயன்தரக் கூடியதென்பதை அறிந்து பொதுமக்கட்கும், சிறப்பாக மாணவர்கட்கும் பயன் படும் முறையில் தண்டலையார் சதகம், நீதி வெண்பா, திருவாரூர் நான்மணிமாலை, நீதிப்பாடல், தனிப்பாடல், பிரபுலிங்கலீலை, நைடதம், கம்பராமாயணம், திருக் குறள், முதலிய பல சிறிய - பெரிய - இலக்கியங்களி லின்றும் செய்யுட்களைத் தேர்ந்து எடுத்து அவற்றி லுள்ள கருத்துக்களைச் சிறுகதையுருவில் எழுதியுள் ளோம். கதையமைப்புக்குத் தக்கபடி, செய்யுட் பொருள் சிதைவுறாத முறையில் சில செய்திகள் முன்னும் பின்னுமாகச்சேர்த்தும் இரண்டோரிடங்களில் எழுதப்பட்டுள்ளன. S. S. L C. தேர்வுக்கு வைக்கப் பட்டிருக்கும் * காம்ப்ரஹென்ஷன் பயிற்சிக்கு இத் தகைய நூல்கள் பெரிதும் பயனளிக்குமெனக் கருதிய யாங்கள் இவற்றை எழுதுகிறபொழுதே உயர் நிலைப்பள்ளி மாணவர்கட்கு உகந்தமுறையில் நடையினை யமைத்து 3-4 ஆம் புத்தகங்களை எழுதி முடித் துள்ளோம்.

பொதுமக்களும் இக்கதைகளின் மூலம் அவ்வக் கதைகளின் அடியில் தரப்பட்டுள்ள செய்யுட்சுவை யினை நன்குணர்ந்து அதனால் அவ்வவ்விலக்கியங்களைக் கற்றற்கு இந்நூல்கள் பெருந்துணை புரியும் என்பதில் யாதோரையமும் இன்றாம். ஆகவே அவர்களும், பள்ளி ஆசிரியர்களும் பிறரும் இந்நூலினை ஆதரித்து எம்மை மேன்மேலும் ஊக்குமாறு கேட்டுக் கொள்கின்றோம்.

கற்பிக்குந் திறம் கருவிலே திருவாகக் கைவந்த வரும், தமிழ்பரப்புதலே தம் கடமையாகக் கொண்ட வரும், வடமொழி தென்மொழிக் கடலென விளங்குபவ ரும், இலக்கணப் புலமையில் விலக்கொணா ஆற்றலும், தருக்கப் புலமையில் சிறக்குநற் பெருமையும், வேதாந்த

* Comprehension

மென்னும் விழுப்பொருளுணர்வும், சிறக்கப்பெற்றுத் திகழ்கின்றவரும், ஒன்பான் சுவையும் ஒருங்குறப் பெற்றுச் சங்கத்தமிழ்நடை பொங்கித் ததும்பும் செவிலி ஈந்தொடுவினையது என்னும் சிறப்புறு நூலையும் கையகக் கற்பக மாலை என்னும் கவின்மிகு நூலையும் இயற்றித் தம் புகழை என்றும் நின்று நிலவுமாறு நிலைபெறுத்தியவரும், ஒன்றுக்கும் பற்றாத எம்மையும் ஒருபொருளாக மதித்து இன்றமிழ் பயிற்றி எழிலுறச் செய்தவருமாகிய எம் செந்தமிழ்ப் பேராசிரியர் உமர்தவ. சித. சுவாமிநாராயணசாமியாரவர்களுடைய திருவருட்டுணை கொண்டு செய்யப்பெறும் இந்நூல் அப்பெருமான் திருவடி மலர்க்கீழ் நின்று சிறப்புறுமாக.

இத்தகைய தமிழ்ப் பணிகளை எமக்குதவி எம்மை மேன்மேலும் ஊக்கிவரும் கழகமுகவர் திரு. வ. சு. அவர்கட்கும், இந்நூற்கு அணிந்துரை வழங்கிய இருமொழிப் பெரும்புலம் படைத்த பெரியார். திருமிகு. ஐ. தங்கசாமிப் பிள்ளையவர்கட்கும் எமது நன்றி என்றும் உரித்தாகுக.

### தற்சிறப்புப் பாயிரம்

சங்கத்து நாரா யணசாமி தாமரைத்தாள்
அங்கத்துள் வைத்தெம் அகம்பாவித்—துங்கமுறும்
இக்கதைமை இப்பாரில் இன்பமுறச் செய்தளித்தேம்
மக்களெலாம் கற்க மகிழ்ந்து.

இங்ஙனம்

பண்டித-வித்துவான்.

மி. பொன். இராமநாதஞ் செட்டியார்.

சு. அ. இராமசாமிப் புலவர்

I. D. TANGASWAMI B.A.,
*Senior Acctt. (Rctd.)*
*Acctt. Generals' Office.*

ROYAPURAM,
MADRAS,
3—3—1946.

# அணிந்துரை

பாடலிபுரத்து மன்னன் சுதரிசனன் என்பான் தன்பாலர் மூடராய்த் திரிதலாலே, சபையின் மிக்க அறிஞரை நோக்கி, "என் மைந்தரது மடமை நீக்கும் தகைமையரிலரோ" என வருந்திக் கூறினான். சபையின்கண் இருந்த துங்கமா மறையோனான சோமசன்மா "இங்கிவர்க் கறிவால் ஒப்பார் இலரெனச் செய்வேன்" என்று உறுதிகூறி, பஞ்சதந்திரக் கதைகளான் கொற்றவன் அருளிய மைந்தரை மாண்ட அறிவினராய் விளங்கச் செய்தனன். சிறுவர்களுக்கு அறிவு கொளுத்தும் வகைகளில், கதைகளடங்கிய நூல்களே சிறந்த வகையென்பது தேற்றம். ஆங்கில மொழியிலும், பிறமொழிகளிலும் அத்தகைய நூல்கள் பலவுள. அவற்றுள் கிரேக்கர் மொழியில் இயற்றப்பட்ட ஈசோப்பின் கட்டுக் கதைகள் அடங்கிய நூல் சாலச் சிறந்தது. இதனைச் சிறுவர்மட்டு மல்ல; ஆண்டுகள் பல கழித்த முதியோரும் படித்து மகிழ்கின்றனர்.

கல்வியிலும் அறிவிலும் நந்தமிழ்நாடு மேன்மையடைய வேண்டுமெனின் நஞ்சிறார்க்குத் தக்க நூல்களின் வாயிலாய் அறிவளித்து நந்தாய் மொழியில் இயற்றப்பட்ட சீரிய நூல்கள்பால் ஆர்வம் அடையச் செய்தல் வேண்டும். இக்கருத்தையுட்கொண்டே சு. அ. இராமசாமிப் புலவரும், பண்டித வித்வான் - மி - பொன். இராமநாதஞ்செட்டியாரும் 'இலக்கியச் சிறுகதைகள்' எனப் பெயரமைந்த இவ்வரிய நூலை இயற்றியுள்ளனர்.

சில நூற்றாண்டுகட்குமுன் சொல்லேருழவரும், வில்லேருழவரும் மலிந்த இத்தமிழ்நாடு, இன்று மெலிவடைந்திருப்பது கண்டு நந்தமிழன்னை துன்புறுகின்றாள். இத்துன்பத்தை ஒழிப்பது நமது பெருங்கடமையாகும். என்னுடைய நண்பர்கள் சிறார்க்கு அளிக்கும் இந்நூலை, அமிழ்தினும் இனிய நந்தமிழ் மொழியில் தேர்ந்த பெரியோர் மகிழ்ச்சியுடன் ஆதரிக்க வணக்கத்துடன் வேண்டுகின்றேன்.

தங்கசாமி.

# பொருளடக்கம்

---

# இலக்கியச் சிறு கதைகள்

## நான்காம் பகுதி



### க. ஆனைமுகன் ஐயம்

கைலாய மலையிலே ஒன்பது வகையான மணி களும் இழைத்துச் செய்யப்பட்ட ஒளிவிளங்கும் மண்டபத்தினடுவே உயர்ந்த அரியணையில் வான வரும் பிறரும் வாழ்த்தி வணங்கச் சிவபெருமான் உமையம்மையோடும் வீற்றிருந்தருளினர். அக் காலையில் மூத்த பிள்ளையாராகிய ஆனைமுகப்பெரு மான் அசைந்த நடையோடு அங்குவர, இறைவன் அவரை வாரி அணைத்து மடிமீதிருத்தி உச்சி மோந்து உள்ளங் குளிர்ந்தார்.

ஆனைமுகனும் தந்தையொடு கொஞ்சிக் குலாவி இன்புற்றிருக்கையில், அவருடைய சடைமுடியில் அணிந்துள்ள வளைந்த வெண்கோட்டினையொத்த மூன்றாம்பிறைத் திங்களைக் கண்டார். கண்டதும் தந்தையின் தோள்மீது தாவி ஏறிச், சடைமுடியி லுள்ள அப்பிறைத் திங்களைத் தன்கையாற் பற்றி வாங்கித், தன்னுடைய உடைந்தகொம்புடன் இணைத் துப் பொருத்திப் பார்த்துக்கொண்டிருந்தார்.

இச்செயலைக் கண்ட சிவபெருமான் ஒன்றுந் தோன்றாது மூத்தபிள்ளையாரை நோக்கிக், 'குழந்தாய், நீ ஏன் இவ்வாறு செய்கின்றாய்?' என்று கேட்டார். அதற்கு மூத்த பிள்ளையார், 'தந்தையே, இஃது என்னுடைய ஒடிந்த கொம்பின் குறை போலக் காணப்பட்டமையால் அதன் உண்மை தெரிந்துகொள்ளும்பொருட்டு இவ்வாறு இணைத்து நோக்குகின்றேன்' என்று மறுமொழி கூறினார்.

தம் குழந்தையின் குழலினும் யாழினும் இனிய இக்குதலைமொழியைக் கேட்ட சிவபெருமானும் உமையம்மையும் உவகைக்கடலில் ஆழ்ந்து உடல் புளகித்தனர்.

தழைவிரி கடுக்கை மாலைத் தனிமுதல் சடையில் சூடும்
குழவிவெண் திங்கள் இற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தால் பற்றிப் பொற்புற இணைத்து நோக்கும்
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி சேர்ப்பாம்.

(அரும்பதவுரை.) கடுக்கைமாலை - கொன்றைமாலை. தனிமுதல் - ஒப்பற்ற முதல்வனாகிய சிவபெருமான். குழவி வெண் திங்கள்-மூன்றாம் பிறை. இற்ற - ஒடித்த. கோடு-கொம்பு. புழை-துளை. பொற்பு உற-அழகு பொருந்த. இணைத்து-தன் கொம்புடன் சேர்த்து. மழை - மழைபோல் மிகுதியாகச் சொரிகின்ற. களிறு - ஆனைமுகக் கடவுளாகிய பிள்ளையார். சென்னி - நம் தலைமீது.

## உ. கைலாய விளையாட்டு

திருக்கைலாய மலையிலே இறைவன் இறைவியோடு இனிது வீற்றிருந்தார். மூத்த பிள்ளையாரும், இளைய பிள்ளையாராகிய முருகப்பெருமானும் சிறிது தூரத்திலே விளையாடிக்கொண்டிருந்தனர். விளையாடிக்கொண்டிருக்கும்போதே அவர்களுக்குள் சண்டை வந்துவிட்டது.

இருவரும் இறைவனிடத்திற்கு ஓடி வந்து தங்கள் குறைகளை முறையிட்டனர். மூத்த பிள்ளையார் இறைவனைப்பார்த்து, 'ஐய, அறுமுகன் என் செவியைக் கிள்ளிவிட்டான்' என்று முறையிட்டார். உடனே இறைவன் அறுமுகனை நோக்கி, 'அறுமுக, நீ ஏன் ஐங்கரன் செவியைக் கிள்ளினாய்?' என்று வினவினார்.

அறுமுகன்: 'அண்ணன் என்னுடைய முகங்களில் விளங்குகின்ற கண்களை ஒவ்வொன்றாக எண்ணித் தொந்தரவு செய்தான்; அதனால் யான் கிள்ளினேன்.'

இறைவன்: 'ஐங்கர, நீ ஏன் அவ்வாறு குறும்பு செய்தாய்?'

ஐங்கரன்: அறுமுகன், என்னுடைய துதிக்கை எவ்வளவு நீளம் இருக்கிறதென்று தன் முழங்கையால் அளந்தான்; அதனால் சினங்கொண்ட யான் அவ்வாறு அவன் கண்களை எண்ணினேன்?

இதனைக் கேட்ட அறுமுகப் பெருமான் நகைத்து நின்றார். இவர்களுடைய வழக்கைக் கேட்ட சிவபெருமான் உமையம்மையை நோக்கி, 'உமையே, உன் பிள்ளைகளின் விளையாட்டைப் பார்ப்பாயாக' என்று கூறினர்.

உமையம்மையார் மூத்த பிள்ளையாரை அருக ழைத்து அணைத்து முத்தமிட்டு மடிமீது வைத்துக் கொஞ்சினார். சிவபெருமான் முருகப்பெருமானை அவ்வாறு அணைத்து மகிழ்ந்தார். உலக முதல்வ ராகிய சிவபிரானுடைய குழந்தைகளே, இவ்விதம் சண்டையிட்டுக்கொண்டமையால்தான் உலகமக் களின் பிள்ளைகளும்; நாம் ஒரு வயிற்றிலேதான் பிறந்தோமென்பதைக்கூட மறந்து சண்டையிட லாயினர் போலும்.

அரனவன் இடத்திலே ஐங்கரன் வந்துதான்
ஐயனென் செவியைமிகவும்
அறுமுகன் கிள்ளினான் என்றே சிணுங்கிடவும்
அத்தன்வே லவனைநோக்கி,
விரைவுடன் வினவவே அண்ணன்என் சென்னியில்
விளங்குகண் எண்ணினனென
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ யப்படி
விகடமேன் செய்தாயென,
மருவுமென் கைந்நீளம் முழமளக் தானென்ன
மயிலவன் நகைத்துநிற்க
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கிநின்
மைந்தரைப் பாராயெனக்
கருதரிய கடலாடை யுலகுபல அண்டம்
கருப்பமாய்ப் பெற்றகன்னி

கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமைக்காக்கவே

(அ-ரை.) அரன்-சிவபெருமான். ஐங்கரன்-பிள்ளையார். அத்தன்-தந்தையாகிய சிவபெருமான். சென்னி-முகத்திலுள்ள.

---

## ௩. இறைவன் தோல்வியுற்றது

திருக்கைலாய மலையிலே முக்கணிறைவனும் இறைவியும் ஒருங்கெழுந்தருளி இருந்தனர். அக்காலை இறைவியானவள் இறைவனைப் பார்த்து 'இறைவனே, தங்கள் தலையின்மீது உறைகின்ற இவ்விளமங்கை யாவள்?' என்று கேட்டாள். அதற்கு இறைவன், 'அவ்வுருவம் மங்கையன்று; வெள்ளிய திரைகளை வீசுகின்ற தண்ணீர்' என்று கூறினார். அதற்கு இறைவியானவள், 'தூய்மையான ஒளியையுடைய முகமும், கருமையான விழிகளும், காதுகளும், வாயுமாகிய இவ்வுறுப்புக்கள் தண்ணீர்க்கும் உண்டோ?' என்று வினவினாள்.

அதற்கு இறைவன், 'அவை உறுப்புக்களல்ல; நின்னால் முகம் முதலியன என்று கூறப்பெற்றவை முறையே தாமரைமலரும், கருங்குவளையும், வள்ளைக் கொடியும், செவ்வல்லிமலருமே யாகும். இவைகளே நினக்கு இவ்வாறு காட்சி அளித்தனபோலும்; இது நின்மயக்கமே என்று செப்பினார்.

இறைவன் கூறியதைப் பொய்யென் றெண்ணிய இறைவி, 'கொங்கைகளும், கூந்தலும் தண்

ணீரில் இருக்குமோ?' என்று பின்னும் கேட்க, 'அவையும், கொங்கையும், கூந்தலு மல்ல; நீர்க் குமிழியும், பாசியுமே யாகும்; யான் கூறியவற்றை இல்லையென்று எங்கே மறு பார்ப்போம், நங்காய்!' என்று இறைவியை விளித்துக் கூறினார்.

இச்சமயத்தில் இறைவன் தலையிலிருந்த கங்கையானவள் 'நங்காய்' என்று இறைவன் உமையம்மையை விளித்ததைத் தன்னை விளித்ததாகத் தவறாக நினைத்து 'ஏன்' என்றாள். உடனே இறைவன், இதுவரை மறைத்துக்கூறிய பொய்யெல்லாம் வெளிப்பட்டமை கண்டு நாணி 'என் பிழையைப் பொறுத்திடுக, என்றுகூறி இறைவியை வணங்கினார். இறைவன் இவ்வாறு வணங்கியதைக் கண்ட இறைவி பெரிதும் மகிழ்ச்சி யடைந்தாள். பொய்யை மறைத்தல் இறைவனாலும் இயலாதென்பது இச்சிறு நிகழ்ச்சியால் விளங்குகிறதன்றோ!

ஐயநின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை
யாரென்ன உமைவினவவும்
அன்னதொரு மடமங்கை யன்றுவெண் திரைகொழித்
தழுகொழுகு தண்புனலெனத்
துய்யவொளி யானனம் கரியவிழி காதுவாய்
தோயத்தி லுண்டோவெனச்
சொல்லருங் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
தூயசெங் குமுதமென்னப்
பொய்யென நினைத்துநற் கொங்கையும் கூந்தலும்
புனலினிடை யுண்டோ வெனப்
புற்புதஞ் சைவலம தெனவே மறுத்துப்
புகன்றிடு நங்காயெனத்

தையலவள் என்னென்ன நாணொடு வணங்கியென்
தன்பிழை பொறுத்திடென்றே
சங்கர னுரைத்திடத் திருவுளம் மகிழ்ந்தசிவ
சங்கரி யுமைக்காக்கவே.

(அ-ரை.) சென்னிமிசை - தலையில். தண்புனல் - குளிர்ந்த நீர். ஆனனம் - முகம். தோயம் - நீர். காவி - செங்குவளை. குமுதம் - செவ்வல்லி. புற்புதம் - நீர்க்குமிழ். சைவலம் - பாசி.

---

## ௪. ஏற்ப திகழ்ச்சி.

ஒரு காலத்தில் வெள்ளிமலையில் முக்கணிறைவனும் இறைவியும் இனிமையாகப் பேசிக்கொண்டிருந்தனர். இறைவி இறைவனைப் பார்த்து, 'எம்பெருமானே! நாம் இரந்துண்பது தகுதியன்று. நாம் இரந்துண்பதாக உலகத்தார் நெடுநாளாகவே இகழ்ந்துரைத்து வருகின்றனர். ஆதலின் இனிமேல் யாம் இரந்துண்பதை யொழித்தலே நன்று. நமக்கு வேண்டிய நிலத்தைத் திருமாலிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். உங்களுடைய நண்பனாகிய இருநிதிக் கிழவன் (குபேரன்) நமக்கு வேண்டிய விதையினைத் தருவான். பலராமன் உழுதற்குரிய கலப்பையைக் கொடுப்பான். மறலி (இயமன்) உழுவதற்குத் தன்னுடைய எருமைக்கடாவைத் தருவான். நம்மிடத்திலேதான் ஒரெருது இருக்கிறது. உங்களிடம் உள்ள மழுப்படையைக் கொழுவாகச் செய்துகொள்வோம். இருக்கிற கயிறுக

ளோடு மேலும் வேண்டிய கயிறுகளை அன்பர்களி டம் இரவலாகப் பெற்றுக்கொள்ளலாம். நம்முடைய இளைய மகனாகிய முருகன் மாடுகளை மேய்ப்பான். ஆகையால் உழுது பயிரிடுதலே இனிமேல் நல்லது என்றாள்.'

இவ்வாறு இறைவி கூறியதைக் கேட்ட இறை வனும் அதற்குடன்பட்டு, 'நல்லது! நல்லது! நீ சொல்லியபடியே செய்வோம். பயிரிடுதற்கு வேண் டிய எல்லாக் கருவிகளும் நமக்கு எளிதாய்க் கிடைப் பனவா யிருக்க, நாம் ஏன் வீணாக இரந்துண்டு பிற ரால் இழிவுறல் வேண்டும்? என்று கூறினார்.

இதனைக் கேட்டுக்கொண்டிருந்த மூத்த பிள்ளை யாகிய ஆனைமுகன் 'என் தொந்தியைத் தூக்கிக் கொண்டு யான் எவ்வாறு வேலைசெய்வேன்! என்று முணுமுணுத்துக்கொண்டார். முருகன் 'என்னால் மாடுமேய்க்க முடியாது? மயிலைத்தான் மேய்ப் பேன்' என்று மறுத்துரைத்தார்.

அச்சுதன் அளிப்பன்கிலம் உமதுநே யன்வித்தை
யருளுவன் பலபத்திரன்
அலம்உதவு வன்சமன் பகடவன் நந்தமக்
கானதோர் எருதும் உண்டே
முச்சிரஅ யிற்படையி னைக்கொழுவ தாக்குவே
மோய்புட னிழுத்திறுக்க
முந்திய வடக்கயிற் றுடன்மற்று நமதன்பர்
முன்போய்இரந்து கொள்வோம்
இச்சையுடன் நமதிளைய தனயனா கியகந்தன்
இனிமையோடு மாடு மேய்ப்பன்

இனியுழுது பயிரிடுதல் நன்றுநன் றிதைவிட்டு
இரந்துண்ப தீனமெனவே
கச்சுமுலை மாதுமை யுரைத்திடும் புத்தியைக்
கைக்கொண் டுளத்தில்இதுநற்
காரிய மெனக்கருதி மெத்தக் களித்திடும்
கண்ணுதல் உமைக்காக்கவே.

(அ-ரை.) அச்சுதன் - திருமால். நேயன் - குபேரன். வித்தை - விதையினை. அலம் - கலப்பை. சமன் - இயமன். பகடு - எருமைக்கடா. முச்சிர அயில் படை-சூலம். மொய்ம்பு - வலிமை. கச்சு - வாரணிந்த. கண்ணுதல் - சிவபெருமான்.

---

## ரு. திரிபுணர்ச்சி

சிவபெருமான்மீது சினங்கொண்ட தாருகாவனத்து முனிவர்கள் ஒருதிய வேள்வி செய்தனர். அவ்வேள்வித் தீயினின்றும் ஒருயானை வெளிப்பட்டது. அந்தயானையைச் சிவபெருமானைக் கொல்லுமாறு முனிவர்கள் அவர்மீது ஏவினர். சிவபெருமான் தன்னைக் கொல்லவந்த அந்தயானையைக் கொன்று அதன் தோலைத் தன் உடலிலே போர்த்துக்கொண்டார்.

இச்செய்தியை அறியாத ஆனைமுகப் பிள்ளையார் யானைத்தோலைப் போர்த்துக்கொண்டுள்ள சிவபெருமானை அடைந்தார். அவருக்கு அப்பெருமான் ஒரு யானையைப்போல் தோன்றினமையால் பிள்ளையார் சினங்கொண்டு அவர்மீது பாய்ந்தார். அப்போது சிவபெருமான் மார்பில் பிள்ளையா

ருடைய இருகொம்புகளும் நன்ருகப் பதிந்துவிட்டன. பின்னரே பிள்ளையாருக்குத் தான், தன் தந்தையையே யானையென்றெண்ணிக் குத்திவிட்டதாகத் தெரிந்தது. அவ்வாறு குத்தப்பட்ட விடங்கள் மார்பின் இருபுறங்களிலும் குழிந்த வடுவாக அமைந்திருந்தன.

இச்செய்தியை யறியாத சிலர் சிவபெருமானுடைய மார்பில் அவ்வடுக்களைக் கண்டு, அவ்வடுக்கள் இறைவியினுடைய கொங்கைகள் அழுந்தியதனல் உண்டான வடுவென்று மாறுபாடாக நினைத்தார்கள். இம்மாறுபட்ட நினைப்பை யறிந்த சிவபெருமானும் மிகவும் மகிழ்வுற்றனர்.

போதொன் றியதண் பொழிற்கமலேசர்பொன் மார்பி லெந்தாய்
சூதொன்று கொங்கைச் சுவடென்ப ரால்தொல் களிற்றுரிவை
மீதொன் றுவகண்டு வெங்கோப மாமுகன் வெண்மருப்பால்
காதொன் றடுகளி றென்றெதிர் பாய்ந்த இணைச்சுவடே.

(அ-ரை.) போது-மலரும் பருவத் தரும்பு. தண்பொழில்-குளிர்ந்த சோலை. சூது ஒன்று - சூதாடு கருவியையொத்த. களிற்று உரிவை - யானைத்தோல். மாமுகன் - யானைமுகன். மருப்பு - கொம்பு. அடுகளிறு - கொல்யானை.

---

## ௯. இறைவனுக்கு அறிவுரை இயம்பிய அன்பர்

ஒரு காலத்தில் ஓரன்பர் சிவபெருமானைக் கண்டார். சிவபெருமான், இறந்த பல நான்முகர்களின் தலைகளையெல்லாம் கோத்துத், தன் தலையில் அணிந்துகொள்ளற்குரிய தலைமாலையாகவும், அவ்வாறே இறந்த பல திருமால்களின் தலைகளையெல்லாம் கோத்துத், தம்காலில் அணிந்துகொள்ளற்குரிய கிண்கிணி என்னும் காலணியாகவும் அணிந்துகொண்டிருந்தார். அதைக் கண்ட அன்பர் பெருமானைப் பார்த்து, "இறைவனே! தாங்கள் இத்தலை மாலைகளை அணிதலை விட்டுவிடவேண்டும்" என்று கூறினர்.

இதைக் கேட்ட சிவபெருமான் வியப்படைந்து அன்பரை நோக்கி, "ஏன் விட்டுவிடவேண்டும்? நீர் இவ்வாறு கூறுவதற்கு என்ன காரணம்?" என்று கேட்டார்.

அதற்கு அன்பர், "அவ்விதம் விடாவிட்டால், நான்முகன் தங்கள் திருமுடியைக் கண்டதாகவும், திருமால் தங்கள் திருவடிகளைக் கண்டதாகவும் பொய்ம்மொழி புகலத் துணிவர். அவ்வாறு அவர்கள் கூறின், அக்கூற்று உண்மையாவதுடன் இத்தலை மாலைகளே அதற்குச் சான்றாதலும் கூடும். ஆதலின் இம்மாலைகளை உடனே நீக்கிவிடுவதோடு இனி என்றும் இவற்றை அணிவதாக உள்ளத்தில் எண்ணுதலும் வேண்டாம்" என்றார்.

அன்பர் கூறிய அறிவுரையைக் கேட்ட இறைவன், அவர் தம்பால் கொண்டுள்ள மதிப்பையும், நான்முகன், திருமால் இருவர்க்கும் தாம் எப்போதும் உயர்ந்தவராகவே இருக்கவேண்டுமென்று கருதும் அவர் நல்லெண்ணத்தையும் எண்ணியெண்ணிப் பெரிதும் மகிழ்வுற்றார்.

வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை
மாலைசிர மாலை யாகக்
கொள்ளுவது மலர்மடந்தை கொழுநர்தலை
கிங்கிணியாக் கோத்துச் சாத்த
உள்ளுவதும் ஒழிவதுமற் றெழியாயேல்
அடிமுடிகள் உணர்ந்தே மென்றே
கள்ளமொழி வான்புகின்தென் கமலேச
அவர்க்கவையே கரியு மாமே.

(அ-ரை.) வள்ளம் - கிண்ணம்போன்ற. கிங்கிணி-காற்சதங்கை. உள்ளுவது - நினைப்பது. ஒழிவது - ஒழிக. கள்ளம் மொழிவான் புகின் - பொய் பேசத் தொடங்கின். கமலேச - தியாகராசப் பெருமானே. கரி - சான்று.

---

## எ. குரங்கும் திருமாலும்

மரங்கள் மிகவும் அடர்ந்த பெரிய சோலை யொன்றிருந்தது. அச்சோலை நன்கு தழைத்துச் செறிந்திருந்தமையின் ஞாயிற்றின் ஒளியும் அதற்குள் நுழைந்ததில்லை. அதில் மா, பலா, வாழை முதலிய கனிதரும் மரங்கள் காய்த்துப் பழுத்துக் கவினுற்று விளங்கின. அச்சோலை மிகுந்த காவலையும் பெற்றிருந்தது.

ஒருநாள் பெரிய குரங்கொன்று அச்சோலைக் காவலனை ஏமாற்றி அவனை அறியாது அதற்குள் நுழைந்துவிட்டது. நுழைந்த குரங்கு ஒரு பலா மரத்தின்கீழே ஒரு பெரிய பழம் நன்கு பழுத்து விழுந்து கிடந்ததைக் கண்டது. அஃது அப்பழத்தைத் தூக்கித், தன்னுடைய மடியில் வைத்துக் கொண்டு தனது கூரிய நகங்களால் கிழித்துச் சுளைகளை எடுத்துத் தின்றது.

மக்கள் வடிவமும் விலங்கு வடிவமுமாகிய இரு வேறு உருவினைக் கொண்ட அக்குரங்கு, மரத்தின் பக்கத்திலிருந்து பலாப்பழத்தினின்றும் செந்தேனொழுகச் சிவந்த சுளைகளை எடுத்துத் தின்பதைக் கண்ட சிலர், மனிதவடிவமும், சிங்கமுகமும் கொண்ட நரசிங்கமாகிய திருமால், பிரகலாதன்பொருட்டுத் தூணினின்றும் வெளிப்பட்டு, இரணியன் என்னும் அரக்கனைப் பிடித்து, மடியில் அழுத்திக்கொண்டு, தம் நகங்களால் அவன்மார்பையும் வயிற்றையும் கிழித்து, உள்ளிருந்து குருதி யொழுகக் குடலைத்

நின்ற காட்சியைப்போல இருக்கிறதென்று கூறி வியப்படைந்தனர். இஃதன்றோ இயற்கைக் காட்சியின் எழிலாகும்!

ஒண்கதிர் பரப்பும் செங்கதிர்க் கடவுள்
வெயில்கண் டறியா வீங்கிருள் பிழம்பிற்
புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பில்
காவலர்ப் பயந்த பாதபத் தொதுங்கிய
இருவே றுருவிற் கருவிரல் மந்தி
பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
மூன்றுறக் கான்டறு முளையெயி றிலங்க
மடித்தலத் திருத்தி வகிர்ந்தவள் ளுகிரால்
தொடுத்தபொற் சுளைபல எடுத்துவாய் மடுப்பது
மானுட மடங்கல் தூணிடைத் தோன்றி
ஆடகப் பெயரின் அவுணன்மார் பிடந்து
நீடுபைங் குடரின் நிணங்கவர்ந் துண்டென
..........................................................................

(அ-ரை.) கடவுள்-சூரியன். வீங்கு-மிக்க. பிழம்பு-திரள். புயல்-மேகம். கண்படுத்தல்-தூங்குதல். பொதும்பு-சோலை. பாதபம்-மரம். ஒதுங்கிய-ஒளித்த. மந்தி-குரங்கு. வருக்கை-பலாப்பழம். எயிறு-பல். வகிர்ந்து-பிளந்து. வள்உகிர்-கூரிய நகம். வாய்மடுப்பது-உண்பது. மானுட மடங்கல்-நரசிங்கம். ஆடகப் பெயரின் அவுணன்-இரணியன். இடந்து-பிளந்து. நிணம்-கொழுப்பு.

# அ. பாம்புப்புற்று

ஒரு காலத்தில் முருகப்பெருமான் தாம் எழுந்தருளியுள்ள கந்தமலையினின்றும் புறப்பட்டுத் தம் ஊர்தியாகிய மயில்மீதேறித் தந்தையாகிய இறைவனைக் காணும்பொருட்டுக் கைலாயமலைக்குச் சென்றார். அவர் தூரத்தில் வரும்பொழுதே அவருடைய ஊர்தியாகிய மயிலைக் கண்டு, இறைவன் அணிகலனுகத் தம்மெய்யில் அணிந்திருக்கும் பாம்புகள் அச்சமடைந்தன. அவர் நெருங்க நெருங்க அப் பாம்புகள் ஒடியொளித்தற்கு வழிதேடின.

சில பாம்புகள் மெய்யினின்றும் அப்பாலும் ஓடத்தொடங்கின. பார்த்தார் இறைவன். 'நம்முடைய அணிகலங்களுக்கு இக்கட்டு வரும்போல் இருக்கிறதே' என்றெண்ணினர். பாம்புகளை எங்கே மறையச் செய்யலாமென்று ஆராய்ந்தார். முதலில் சடைக்காட்டில் புகச்செய்து மறைத்து வைக்கக் கருதினர். அவ்விதம் செய்தால் கங்கையும், திங்களும் அஞ்சக்கூடுமே என்று கருதினர். நல்லவேளையாகத் தாம் அணிந்திருந்த நான்முகர் தலைமாலையின் நினைவு வந்தது. உடனே அஞ்சிய பாம்புகட்குஅத்தலையோடுகளைச் சுட்டிக்காட்டினர். பாம்புகளும் தாம் பதுங்குவதற்கு நல்ல புற்று அகப்பட்டதென்று கருதி, முருகக்கடவுள், மயிலுடன் அவ்விடத்தி லிருக்கும்வரை அத்தலையோட்டுப்புழைகளுக்குள்ளேயே மறைந்து இருந்து, அவர் மயிலுடன் அகன்றபின் வெளிப்பட்டன.

பாக மொருபெண் குடியிருக்கும் பரமன் அணியிற் பரித்தமணி
நாகம் நுழைவுற் றுடல்சுருய்ந்து கிடந்து கருவெய்ய தலைப்புழையிற்
போக மெல்லத் தலைநீட்டிப் பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில்வா கனப்பெருமாள் துணைத்தாள்கமலந் தொழுதிடு
[வாம்.

(அ-ரை.) அணியின் - அணிகலத்தைப்போல. பரித்த - தாங்கிக் கொண்டுள்ள. கரு - ஒளி பொருந்திய. புழை - துளை.

---

## கூ. மாற்றுள் பணிதலின் மகிழ்ச்சி

ஒரு காலத்தில் சிவபெருமானிடத்தே உமையம்மைக்கு ஊடல் உண்டாயிற்று. ஒன்றிய அன்பு வாய்ந்த தலைவன் தலைவியர்க்கிடையே பிணக்குண்டாயின், அதனைத் தீர்க்கும்பொருட்டுத் தலைவன் தலைவியை வணங்குவது பண்டைக்காலந்தொட்டே பயின்றுவரும் வழக்கமாகும். அக்காலத்தில் தலைவி சீற்றங்கொண்டு தலைவனைக் காலால் உதைத்தாளாயினும், அதனைப் பொருட்படுத்தாது தன் குறையைப் பொறுக்குமாறு வேண்டுவான் தலைவன்.

அம்முறைப்படியே இறைவனும் இறைவியின் ஊடலைத் தணிக்கும்பொருட்டு வணங்கினார். இறைவன் அவ்வாறு தம்மை வணங்கியதுகூட உமையம்மைக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அவர் பணிந்தபோது, அவருடன் தன்னைப் பணிந்த நெற்றிப் பகையாகிய பிறைத்திங்களையும் இடையின் பகையாகிய பாம்பையும் கண்டபோதும் அவ்வம்மையின் மனம் மகிழவில்லை. ஆனால் தம் மாற்று

ளாகிய, இறைவன் முடியிலிருக்கும் புனல்மங்கை யானவள் தன்னைப் பணிதலை யெண்ணியே பெரி தும் மகிழ்ந்து ஊடல் தீர்ந்தருளினர்.

உலகத்திலே மாற்ருள்பகை இவ்வாறுதான் ஒவ்வொருவரையும் ஆட்டிவைத்துப் பின் அற்ப நிகழ்ச்சிகளிலே மனமகிழச் செய்கிறது. அங்ஙிலை உமையம்மையையும் விடாமை வியக்கத்தக்க தன்றே?

ஆதி பகவன் தனதுடல் தணிப்பான் பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சு மதற்குநெற்றிப் பகையும் அல்குற் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழுந் செயற்கும் உவகை செயாமல்அலை
மாது பணியு மதற்குமனம் மகிழும் உமையை வணங்குவாம்.

(அ-ரை.) ஊடல் - பிணக்கு. தணிப்பான் - தணிக்கும்பொருட்டு. அல்குல் - இடையின் பின்புறம். அலைமாது - கங்கை.

---

## கூ. கடல் மலையானது

ஒரு சிறுவன் புராணங்களைப் படித்துக்கொண் டிருந்தான். அவற்றில் சிவபெருமான் எழுந்தருளி யுள்ள கைலாயமலை வெள்ளியாலாயதென்று கூறப் பட்டிருந்தது. அதைப் படித்த சிறுவன் வியப் படைந்து தன்தந்தையைப் பார்த்து, "அப்பா! இறைவன் எழுந்தருளியுள்ள கைலாயமலை வெள்ளி யாலானதென்று கூறப்பெற்றிருக்கின்றதே. இஃது உண்மையா?" என்று கேட்டான். அதற்கு அவன் தந்தை "வெள்ளிமலை என்ருல் வெள்ளியா லானமலை யென்றுபொருளன்று. வெண்மையான நிறமுடையதென்பதுதான் பொருள்.

ஒருகாலத்தில் உபமன்னியமுனிவர் என்றொரு முனிவர் இருந்தார். அவர் குழந்தையா யிருந்த பொழுது சிவபெருமானை நோக்கிப் பால்வேண்டி அழுதார். இவருடைய அழுகைக்கு இரங்கிய இறைவன் திருமால்துயிலும் பாற்கடலை அப்படியே தூக்கி அந்தக் குழந்தைக்குக் கொடுத்தார். குழந்தையும் அதனைக் குடித்துப் பசிதீர்ந்தது.

இதைக்கண்ட, எஞ்சியிருந்த பாற்கடல் நாம் திருமாலுக்கு இருப்பிடமாய் இருப்பது தக்கதன்று. இன்னுமொரு குழந்தை அழுது இறைவனை வேண்டினால் அதற்கும் இவ்வாறே நம்மைக் கொடுத்துவிடுவார். அவ்வாறு கொடுக்கும்பொழுது அதைத் தடுப்பதற்கு, இப்போது நம்மை இருப்பிடமாகக்கொண்டிருக்கும் திருமாலுக்கு வன்மை கிடையாது. ஆதலின் நாம் அவ்விறைவனுக்கே இருப்பிடமாகிவிடுதல் நலமாகுமென் றெண்ணி உருண்டையாகத் திரண்டு வந்து இறைவன் தங்கியிருப்பதற்குரிய மலையாக விளங்குகின்றது. இதனாலேயே கைலாயமலை வெண்மையாக விளங்குவதாகும்" என்று பதில் இறுத்தார். இதைக்கேட்ட சிறுவன் "இப்படி எங்கே கூறி இருக்கிறது?" என்றான். "இதையும் ஒரு புலவர் சொல்லியிருக்கிறார். நீ பல நூல்களையும் படிக்கும்பொழுது தெரிந்துகொள்ளுவாய்" என்றார் தந்தை. இதைக்கேட்ட சிறுவனும் வாளா இருந்துவிட்டான்.

கன்பிசைக் தொருசேய் இன்னும் கலுழினும் தனைக்கொடுப்பன்
மன்பிசைக் துண்ட மாயன் மறுத்திட வலிய னல்லன்
நன்பிசைக் திறைவ னுக்கே நாமிட மாவ மென்று
பன்பிசைக் ததிரண்ட பரிசில்கின் றிடும் அக் குன்றம்.

(அ-ரை.) சேய்-குழந்தை. கலுழினும்-அழுதாலும். தலைஎன்றது, பாற்கடலை. இசைந்து - பொருந்தி. இறைவன் - சிவ பெருமான். அலை-பாற்கடல். பரிசில்-தன்மையைப் போல். குன்றம் - கைலாயமலை.

---

## கக. வெள்ளி மலை

ஓராசிரியர் ஒருநாள் தன்வகுப்பில் மாணவர்களுக்குக் கைலாயமலையைப்பற்றிப் பாடம் சொல்லிக்கொண்டு வந்தார். அப்பொழுது அந்த மலை மிகத்தூய வெண்மையான நிறமுடையதென்றும், அதில் உள்ள வெண்மையான பொருள்களை அறிந்துகொள்வது அருமையாகுமென்றும், அத்தகைய வெண்மையாய் இருப்பதால்தான் அதற்கு வெள்ளிமலை என்னும் பெயரும் வழங்கி வருகிறது என்றும், அதில் சிவபெருமான் உமையம்மையோடு வீற்றிருக்கின்றார் என்றும் கூறினர்.

இவைகளைக் கேட்டுவந்த ஒரு மாணவன் எழுந்து நின்று ஆசிரியரை நோக்கி, "ஐயா! அவ்வாறு வெண்மையுடையதென்றால் வெள்ளிய பொருள்கள் அம்மலையை அடைந்தபொழுது எவ்வாறு அப்பொருள்களைப் பிறர் அறிந்துகொள்ளுதல் கூடும்?" என்று கேட்டான்.

அதற்கு ஆசிரியர் "அம்மலையிலிருந்து விழுகின்ற அருவிக் கூட்டங்கள் அதன் ஒலியாலும், அம்மலைமீது தவழ்ந்து செல்லும் திங்கள் அதனிடத்திலுள்ள மறுவாலும், சிவபெருமானை வணங்குதற்கு வரும் தேவர் தலைவனாகிய இந்திரனுடைய

வெள்யானை அது சொரிகின்ற கரிய மதநீராலும், நான்முகன் ஊர்தியாகிய அன்னப்பறவை அதனுடைய சிவந்த காலாலும் அறியப்படும். இவ்வாறன்றி வேறு எவ்வகையாலும் அறிய முடியாது" எனக் கூறினார்.

இதைக்கேட்ட மாணவர்கள் 'இவ்வளவு வெண்ணிற முடையதா அம்மலை!' என்று எண்ணி வியப்புற்றனர்.

ஒழுகுறும் அருவி யீட்டம்
ஒலியினால் ஒருவெண் திங்கள்
பழுகுறும் உடற்க ளங்கால்
பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தால்
மலர்மிசைக் கடவுள் ஊர்தி
அழுகுறு நடையால் அன்றி
அறிதரப் படாஅக் குன்றில்

(அ-ரை.) ஈட்டம் - கூட்டம். ஒரு-ஒளிபொருந்திய. பாகசாதனன்-இந்திரன். கோட்டு - கொம்பினையுடைய. மழகளிறு - இளையானை. மலர்மிசைக் கடவுள் ஊர்தி - நான்முகன் வாகனமாகிய அன்னம்.

---

## கஉ. முகிலும் திருமாலும்

ஒரு காலத்தில் திருமாலானவர் விண்ணவர்களின் வேண்டுகோளின்படி பாற்கடல் கடைந்து அமுதம் எடுப்பதற்காகச் சென்றார். அப்பொழுது அவருடைய நிறம் மற்றைய வானவர்களின் நிறம் போல வெண்மையுடையதாகத்தான் இருந்தது. மந்தரமலையை மத்தாகவும், வாசுகியைக் கடைகயிறாகவும் கொண்டு வானவரும், தானவரும் வாசுகியின் இருபுறத்தையும் பற்றிநின்று கடைந்தனர். அப்போது திருமால் ஆமையுருக்கொண்டு மலை அலையில் அழுந்திவிடாதபடி முதுகில் தாங்கிக் கொண்டிருந்தார்.

இவ்வாறு கடையும்போது வாசுகியாகிய பாம்பு துன்பம்பொறாது நஞ்சினைக் கக்கிற்று. அந்நஞ்சின் கொடுமை தாங்காது திருமால் முதலிய தேவர்களின் உடம்பு கறுத்துவிட்டன. உடனே அவர்கள் சிவபெருமான் இருக்கும் கைலைமலையை நோக்கி ஓடினர். இவ்வாறே தொண்டை நாட்டிலுள்ள முகிற்கூட்டங்கள் வெண்ணிறத்தோடு கடலையடைந்து அதிலுள்ள நீரை நிறைய முகந்து கருநிறமடைந்து, திருமால் முதலிய தேவர்கள் வெள்ளிமலையை நோக்கி ஓடியதுபோல இம்முகிற் கூட்டங்களும் நந்திமலையை யடைந்து மழைபொழிந்தன. பின் சிவபெருமான் நஞ்சின் கொடுமையை அடக்கியது போல இம்மழை நீரும் அந்நாட்டுக் கோடையின் கொடுமையை யடக்கிக் குளிர்வித்தது.

இதனால்தான் புலவர்கள் முகிலைத் திரு மாலுக்கு ஒப்பிட்டு உரைக்கின்றனர்.

கடல்க டைக்திடச் செல்லுமுடம் வெள்ளைமால் கடுப்பப்
படலை வெண்முகில் பரவைநீ குழக்கிவாய் மடுத்து
விடமெ ழுந்தென மீண்டதும் மாயலை விழைய
உடல்க றுத்தவின் னெறிப்படர்க் தொய்யென மீண்டு.

(அ-ரை.) வெள்ளை மால் - வெண்ணிறமுள்ள திருமால். கடுப்ப - ஒப்ப. படலை வெண்முகில் - பரந்த வெண்மேகம். பரவை - கடல். வாய் மடுத்து - உண்டு. ஒய்யென - விரைவாக.

---

## கங. செஞ்சடையின் சிறப்பு

முருகன் திருவருளைப் பெற்ற, குமரகுருபரர் என்னும்பெரியார் கடவுளின் புகழைச் சிறப்பித்துப் பாடுவதில் பெருவிருப்பங் கொண்டவர்.

இப்பெரியார் ஒருநாள் திருவாரூருக்குச் சென்று அங்குக் கோயில்கொண்டுள்ள சிவபெருமானைக் கண்டு வணங்கினர். அப்போது அப்பெருமானின் திருவுருவில் கருத்தைப் பதித்த குமரகுருபரர் இறைவனுடைய திருமுடியிலுள்ள, செஞ்சடை, கொன்றைமலர், வண்டு, கங்கை, பிறை முதலியவற்றைக் கண்டு களித்தவராய், அத்திருமுடியின் சிறப்பை வெளியிடக் கருதி, அப்பெருமானுடைய அழகிய சிவந்த சடை நெருப்பையொக்கும் என்றும், அச் சடையில் அணிந்துள்ள கொன்றைமலர் பொன்னை யொக்கும் என்றும், அக்கொன்றையை மொய்த் துள்ள வண்டுகள் கரியையொக்கும் என்றும்

கங்கையாகிய பெண் நகைசெய்தற்குப் பொன்னைக் கொடுத்துவிட்டுத் தட்டானிடம் காத்திருக்கும் பெண்ணையொக்கும் என்றும், இறைவன் அச்சடையில் தரித்துள்ள வளைந்த பிறைத்திங்கள் முதுமையால் உடல்கூனிய கிழத்தட்டானையொக்கும் என்றும் கற்பனைசெய்து பாடியருளினார்.

இறைவனுடைய திருச்சடையையும் அதில் அமைந்துள்ள பொருள்களையுமே தட்டானுடைய தொழிற்களமாகவும், தட்டானாகவும் பாடிய அடிகளின் கற்பனையைக் கண்ட அங்குள்ளார் அனைவரும் பெரிதும் வியந்து புகழ்ந்தனர்.

தன்னொக்குஞ் செல்வக் கமலைப்
பிரான்செஞ் சடாடவிமற்
றென்னொக்கு மென்னி லெரியொக்குங்
கொன்றை யெரியிலிட்ட
பொன்னொக்கும் வண்டு கரியொக்கும்
கங்கைஅப் பொன்செய்விக்கும்
மின்னொக்கும் பொன்செய் கிழக்கொல்ல
னொக்குமவ் வெண்பிறையே.

(அ-ரை.) கமலை - திருவாரூர். சடாடவி - சடைக்காடு. மின் - மின்னற்கொடிபோன்ற இடையினையுடைய பெண்.

## கச. சோலைக் காட்சி

ஓரழகிய பெரிய சோலையில் வானளாவிய மரங்கள் செறிந்திருந்தன. அவற்றுள் உயர்ந்த பாக்கு மரம் ஒன்று இருந்தது. அதன்மீது ஒருமுல்லைக் கொடி படர்ந்து நாற்புறமும் கொடிகள்விட்டு அப்பாக்குமரத்தைச் சூழ்ந்துள்ள வாழைமரங்களின் மீதும் ஏறிக்கொண்டன. அத்தோற்றம் கழைக்கூத்தாடி நீண்ட மூங்கிலை நட்டு அம்மூங்கில் உறுதியாக நிற்றற்பொருட்டு நாற்புறமும் முளைகளை அடித்து அவற்றில் கயிறுகொண்டு கட்டிய காட்சியே போல் விளங்கிற்று.

அப்பாக்குமரத்தின் மீது மயில் ஒன்று தனது அழகிய தோகையை விரித்து நின்று ஆடிற்று. அதைச் சுற்றிலும் மந்திகள் பலாப்பழங்களைத் தங்கள் கையிலே தூக்கிக்கொண்டு மேளம் கொட்டுவதைப்போல் அடித்துக்கொண்டிருந்தன. அப்போது ஓர் ஆண்குரங்கின் கையிலிருந்த பலாக்கனியை மற்றைக்குரங்குகள் பிடுங்கத் தொடங்கின. அவ்வாறு பிடுங்கத் தொடங்கிய குரங்குகளிடமிருந்து தப்பித்துக்கொள்ளும் பொருட்டு அக்குரங்கு பலாக்கனியோடு வாழைமரத்தின்மீது தாவி அதிற் படர்ந்துள்ள கொடிகளின் வழியாகப்பாக்கு மரத்திற்கு ஏறிச் சென்றது. இத்தோற்றம் ஒரு பெண் கழைமீதுநின்று விளையாட, ஒருகூத்தன் குடங்கொண்டு கயிற்றின் மீது ஏற,மற்றைக்கூத்தர் மத்தளம் அடிப்பதேபோல் தோன்றிற்று.

இந்நிகழ்ச்சியை அச்சோலையில் இருந்த பிற பறவை முதலியவை இஃது ஒருகழைக்கூத்தர் விளை

மாட்டைப்போல் இருக்கின்றது எனப் பார்த்து மகிழ்ச்சியுற்றன.

வண்டுகூட் டுண்ண நுண்துளி பிலிற்றித்
தண்டே னுறைக்குந் தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெறிப்ப விட்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகில்
செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தென்னங் கிளைதொறும் பணைத்து
மறிந்துகீழ் விழுந்த நறுந்துணர்க் கொடிகள்
நாற்றிசைப் புறத்து நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினிற் படரஅப்
பைங்குலைக் கமுகில் படர்சிறை விரித்தொரு
கண்செய் கூந்தல் களிமயில் நடிப்ப
நெடுந்தாள் மந்திகள் குடங்கையில் தூக்கி
முட்புறக் கனிகள் தாக்கக் கொட்புறும்
வானர மொன்று வருக்கைத் தீங்கனி
தானெடுத் தேந்தபு தலைமேற் கொண்டு
மந்திகள் தொடர மருண்டுமற் றந்தப்
பைந்துணர்க் கொடியில் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்(து)
அணங்கனு ளொருத்தி யாடினள் நிற்பப்
பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனில் நடக்கும் வண்ணம தேய்க்கும்,

.................................................................................

(அ-ரை.) கூட்டுண்ண-கொள்ளை கொண்டுண்ண. பிலிற்றி-சிந்தி. உறைக்கும் - சிந்தும். பொதும்பர் - சோலை. விண்புலத் தவர்-தேவர். பழுக்காய்-பாக்குக்குலை. கமுகு-பாக்கு மரம். துணர்-பூங்கொத்துக்களையுடைய, நான்றன-தொங்கினவாய். தாறு - குலை. கதலி - வாழைமரம். மந்தி - பெண்குரங்கு. முள் புறம் கனி - முட்களைப் புறத்தே உடைய பலாப்பழம். கொட்புறும் - சுழலும்.

வருக்கை - பலா. எக்கபு-எக்கி. படர்தரு-செல்லும். வடம் - கயிறு. அணங்கு அனாள் - தெய்வப்பெண்ணை ஒத்தவள். பணை - பறை. மருங்கினர் - பக்கத்தில் உள்ளவர். வடம்-கயிறு. ஏய்க்கும்-ஒக்கும்.

---

## ௧௫. செத்த குரங்கைச் சுமந்த கதை

திருவானைக்காவிலுள்ள சிவபெருமானுக்கு மிகச் சிறப்பாகத் திருவிழா நிகழ்ந்தது. ஒரு தேவடியாள் தலைநிறையச் சாமந்திப்பூவைச் சூடிக் கொண்டு இறைவன் முன்னால் நாட்டியம் ஆடிக் கொண்டிருந்தாள்.

திரளான மக்கள் சூழ்ந்துகொண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர். அக்கூட்டத்தில் புலவர்கள் பலரும் இருந்தனர். அப்பொழுது ஒரு புலவர் மற்றொரு புலவரைப் பார்த்து, 'இவள் ஆடும் நாட்டியத்தைக் குறித்து நகைச்சுவையுடன் ஒரு பாடல் இயற்றுங்கள் பார்ப்போம்' என்றார்.

அவ்வாறு பாடும்படி கேட்கப்பெற்ற புலவர் உடனே, 'கைத்தலத் தணிந்த வளையல் கலகலென ஒலிக்கவும், கால் சதங்கைகள் சத்தமிடவும், தத்திமி என்று ஓசை உண்டாகவும் நாட்டியஞ் செய்கிற இப்பெண் செத்த குரங்கைத் தலைமேல் சுமந்து கொண்டு திரிகின்றாள், என்று பாடினார். இதனைக் கேட்டதும் பாடச்சொன்ன புலவருக்கும் பிறருக்கும் 'செத்த குரங்கைத் தலைமேல் சுமந்துகொண்டு திரிகின்றாள்' என்ற தொடருக்குப் பொருள் விளங்காது திகைத்தனர்.

அவர்கள் பாடிய புலவரை நோக்கி அத் தொடரின் பொருளை வினவினர். உடனே அப் புலவர் நகைத்து 'செத்த குரங்கு-சாமந்தி: செத்த-சா, மந்தி-குரங்கு; என்று பொருள் விரித்தார். இதனைக்கேட்ட அனைவரும் வியந்து புலவர் திறமையைப் பெரிதும் கொண்டாடினர்.

கைந்தலந் தன்னில் பசும்பொன் வளையல் கலகலெனச்
சத்த மொலித்திட நூபுரம் பாதச் சதங்கைகொஞ்சத்
தத்திமி யென்று நடஞ்செய்சம் பிசர்தம் சந்நிதிப் பெண்
செத்த குரங்கைத் தலைமேல் சுமந்து திரிந்தனளே.

(அ-ரை.) நூபுரம் - ஒருவகைக் காலணி.

---

## கசு. புலவர் மதிவன்மை

போச மன்னனது பேரவைக்குப் புலவரொருவர் பரிசு பெறுதற்குச் சென்றார். ஆங்கு அமைச்சர் முதலிய பலர் குழுமி இருந்தனர். புலவர் அவையினரைப் பார்த்து 'சிவபெருமான் இறந்தார், இறந்தார்' என்று கூறிக் கூச்சலிட்டார். புலவரின் செய்கையைக் கண்ட அரசர் முதலாயினோர் ஒன்றும் புரியாது திடுக்கிட்டுப் புலவரைப் பார்த்து, 'என்ன? என்ன? விளங்கச் சொல்லும்' என்றார்கள்.

புலவர் மீண்டும் அவையினரைப் பார்த்து 'இறைவன் இறந்தார்' என்று சொன்னார். அரசன் புலவரைநோக்கி நகைத்து 'நீர் சொல்வது வேடிக்கையாக இருக்கின்றதே. இறைவன் எவ்வாறு இறந்தார்?' என்று கேட்டான்.

புலவர் அரசனை நோக்கி இறைவன் பாதி உடலை மலைமகளுக்கும், மற்றைப் பாதியுடலைத் திருமாலுக்கும் கொடுத்துவிட்டபடியால் இறைவன் இறந்தான்' என்றார். அதைக்கேட்ட அரசன் 'அங்ஙனமாயின் அப்பெருமான் தலையிலிருந்த கங்கை முதலியன என்னாயின? என்று கேட்டான்.

புலவர் அதற்கு 'கங்கை கடலில் கலந்துவிட்டது; பிறை வானில் பறந்துவிட்டது; பாம்பு புற்றில் புகுந்துவிட்டது. கற்பகம் போன்ற போசனே! கொடையை நின்னிடம் கொடுத்துவிட்டார். தன் கையிலிருந்த ஓட்டைமட்டும் இதோ என்னிடம் தந்துவிட்டார் பாரும்' என்று தன்கையிலிருந்த ஓரோட்டினைக் காட்டினார்.

புலவரின் மதிநலத்தைக் கண்ட மன்னன் முதலாயினோர் பெரிதும் கொண்டாடினர். அரசன் புலவருக்குப் பெருஞ் சிறப்புச் செய்தனுப்பினான்.

ஒருபாதி மால்கொள மற்றொரு பாதி யுமையவள் கொண்(டு)
இருபாதி யாலும் இறந்தான் புராரி இருநதியோ
பெருவாரிதியில் பிறைவானில் சர்ப்பம் பிலத்தில்கற்ப
தருவான போச கொடையுன்கை யோடென்கை தந்தனனே

(அ-ரை.) புராரி-சிவபெருமான். இருநதி-பெரிய கங்கை. வாரிதி-கடல். போச-போசமன்னனே.

## கஎ. ஈவது விலங்கேல்

செய்யுள் இயற்றுவதில் திறம்பெற்றவர்களாகிய இரட்டைப் புலவர்கள் பல விடங்கட்குஞ் சென்று ஆங்காங்குள்ள பெருமன்னர், குறுநிலமன்னர், செல்வர் முதலியோரைப் பாடிப் பரிசில் பெறுவது வழக்கம். அவ்வழக்கப்படி ஒருகால் மதுரையை யடைந்து பாண்டிய மன்னனைப்பாடிப் பரிசில் கேட்டனர். பாண்டியனும் மகிழ்ந்து தகுந்த பரிசில் அளிக்கத்தொடங்கினன்.

அப்பொழுது அவன் அவையிலிருந்த பொறாமைக் குணமுள்ள அமைச்சனொருவன் மன்னனைப் பரிசில் கொடுக்க வேண்டாமென்று தடுத்தான். இரட்டைப்புலவர்கள் அவ்வமைச்சன் மீது பெருஞ்சினம் கொண்டனர். அவர்களுள் ஒருவர் மற்றவரைப் பார்த்து 'பழமையான தமிழ்ப் புலவரே, இந்த அமைச்சனாகிய புல்லிய குரங்கு மரா மரத்திலிருப்பதை விட்டு இந்த மன்னவைக்கு ஏன் வந்தது? என்று கேட்டார்.'

அதற்கு மற்றைப் புலவர் 'இப்பூவுலகம் போற்றும் தமிழ்வளர்த்த பாண்டியனையும், அவன் தம்பியையும் இராமனென்றும், இலக்குமணனென்றும் இக்குரங்கு நினைத்துக்கொண்டு விட்டது.எங்கு இராமனும், இலக்குமணனும் இருப்பார்களோ அங்குதானே இராமபக்தனாகிய அனுமானும் இருப்பான்? ஆகவே, மாறனையும் அவன் தம்பியையும் இராம இலக்குமணர்களாக எண்ணிய இவ்வமைச்

சனுகிய குரங்கும் இங்கு வந்திருக்கின்றது' என்று மறுமொழி பகர்ந்தார்.

இம்மொழியைக் கேட்டு அவ்வரசவையிலிருந்த அனைவரும் பெருநகை புரிந்தனர். ஈவதை விலக்கிய அமைச்சனே நாணி முகங் கவிழ்ந்தான். அன்று முதல் அவன் தன் இழி குணத்தையும் விட்டு விட்டான்.

*புராதன மான தமிழ்ப்புல வீர்! இந்தப் புன்குரங்கு*
*மராமரம் விட்டிங்கு வந்ததென் னே?வகை கேட்டிலையோ?*
*தாரதலம் வென்ற தமிழ்மா றனையுந்தன் தம்பியையும்*
*இராகவ னென்றும் இலக்குவ னென்றும் இருந்ததுவே.*

(அ-ரை.) புராதனம்-பழமை. தாரதலம்-உலகம். மாறன்-பாண்டியன்.

---

## ௧௮. துன்பத்தின் தொடர்ச்சி

ஒரு குடியானவன் வறுமையால் மிகவும் துன்பப் பட்டுக் கொண்டிருந்தான். பொல்லாத காலம் அவனைச் சூழ்ந்துகொண்டு நின்றது. அதனால் அவனுக்குத் துன்பங்கள் தொடர்ந்து தோன்றலாயின.

ஒருநாள் நல்ல மழை பெய்துகொண்டிருக்கையில் அவனுடைய பசு கன்றுபோட்டது. அதனால் கன்றுக்கும் பசுவிற்கும் இக்கட்டு வரும்போல் தோன்றிற்று. அதற்கேற்ப அவன் வீடும் இடிந்து விழுந்தது. அதே நேரத்தில் நிறைந்த கருக்

கொண்டிருந்த அவன் மனைவியும் கருப்பநோய் கொண்டாள். அச்சமயத்தில் அவனுடைய வேலையாள் இறந்துவிட்டதாகச் செய்தி வந்தது.

இத்தனை துன்பங்களுக்கிடையில் குடியானவன் ஆனது ஆகட்டுமென்று வயல் ஈரம் நீங்குவதற்குமுன் விதைதெளித்துவிடுவோமெனக் கருதி விதைகொண்டு சென்றான். அச்சமயம் பார்த்து அவனுக்குக் கடன் கொடுத்தவனொருவன் வழியிலே வந்து மறித்துக்கொண்டு தன்கடனைத் திருப்பித் தருமாறு வற்புறுத்தினான். இந்நிலையில் அவனுடைய சுற்றத்தானொருவன் இறந்துபோனானென்ற சாவோலையும் வந்தது. கடன்கொடுத்தவன் அவனை வற்புறுத்தற்கு இது சமயமல்லவென்று திரும்பினான். அப்போது என்றும் வராத விருந்தினர் சிலர் வந்தனர். அவர்களை வரவேற்றுப் பேசிக்கொண்டிருக்கையில் அக்குடியானவன் காலில் பாம்பொன்று கடித்துவிட்டது.

உடனே பக்கத்திருந்தவர் அந்நஞ்சினை நீக்கி உதவி புரிந்தனர். இத்தகைய பொல்லாத காலத்தில் அரசாங்க வரிப்பணம் தண்டுவோர் அவன் நிலவரியைத் தருமாறு வற்புறுத்தினர். இத்துன்பங்களெல்லாம் போதாவென்று குருக்கள் ஒருவர் அவனிடம் வந்து அவ்வாண்டில் தனக்குக் கொடுக்க வேண்டிய தருமப்பணத்தைக் கொடுக்குமாறு கேட்டார். இவைகளையெல்லாம் பார்த்த குடியானவன் 'ஒருவனுக்கு இப்படிப்பட்ட துன்பமும் உண்டாகுமோ!' என்று சிரித்தான்.

ஆவின மழைபொழிய இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ அடிமை சாவ
மாவீரம் போகுதென்று விதைகொண் டோட
வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளச்
சாவோலை கொண்டொருவன் எதிரே செல்லத்
தள்ளவொண்ணா விருந்துவரச் சர்ப்பம் தீண்டக்
கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்கக்
குருக்களோ தட்சணைகள் கொடுவென் றாரே.

(அ-ரை.) ஆ ஈண - பசு கன்றின. அகத்து அடியாள் - மனைவி. மா - வயல்.

---

## ௧௩. புலாலுண்ட புல்லன்

கொழுமூர் என்னும் ஊரிலே முத்துநாகப்பன் என்றொரு செல்வன் இருந்தான். அவனுக்குப் பொருட்செல்வமட்டும் இருந்ததே தவிர மற்றை யருட்செல்வமோ அறிவோ சிறிதும் கிடையா. எவ் விதமான உயிர்களின் இறைச்சியையும் மாறுபாடு கருதாமல் தின்பான். எப்பொழுது பார்த்தாலும் புலால் உண்பானே தவிர மரக்கறி வகைகளையே உண்ணமாட்டான். அவனிருந்த ஊரில் ஆடுமாடு களே இல்லாமல் செய்த பெருமை அவனையே சாரும்.

அவனுடைய கொடுந்தன்மைகளை அறிந்த ஒரு புலவன் அவன்மீது பெரிதும் வெறுப்படைந்தான். அவனுடைய தன்மைகளையெல்லாம் தொகுத்து, 'கொழுமூர் முத்துநாகப்ப னென்பவன் பிள்ளைக் கறியை உண்ட சிவபெருமானிடத்தில் அன்பில்லா தவன். அவனுடைய வாய் தின்றறியாத புலால்

வகையே கிடையாது. அவன் மரக்கறியையும் காய்க்கறியையும் சிறிதும் விரும்பமாட்டான். நன்றாகத் தாளிக்கப்பட்ட நாய்க்கறியையும் புசிப்பான்' என்னுங் கருத்துள்ள ஒரு செய்யுளை அவன்மீது பாடி ஊரார் முன்னிலையில் அரங்கேற்றமும் செய்தார். இதனைக்கேட்ட அவ்வூரார் அச்செல்வனை எள்ளி நகையாடினர்.

இவ்வாறு இகழப்பட்டும் அச்செல்வன் நல்வழிக்கு வரவில்லை. புலவருக்குப் பின்னும் வெறுப்புஞ் சினமும் மிகுந்தன. ஆகையால் அவர் மீண்டும் அவனுக்கு அறிவுகொளுத்தும்பொருட்டு, 'திருமால் பாம்பில் கிடப்பான். காமவேள் கன்னியரின் மையலில் கிடப்பான். ஆனால் கொழுமூர் முத்து நாகப்பனோ தான்செய்யும் தீவினையால் என்றும் எழுநரகங்களிலும் ஆழ்ந்து கிடப்பான்' என்னும் கருத்துள்ள மற்றொரு செய்யுளையும் செய்து அரங்கேற்றினார்.

அன்றுமுதல் அச்செல்வன் நல்லறிவு தலைப்பட்டான் என்று அவ்வூரினர் கூறிக்கொண்டார்கள்.

செய்க்கறி யுண்ட சிவன்மேலன் பற்றவன் சிசியவன்
வாய்க்கறி யாத விடக்கா னதுமில் மரக்கறியும்
காய்க்கறி யென்பதும் வேண்டான்சம் பாரங் கனக்கவிட்ட
நாய்க்கறி யும்புசிப் பான்கொழு மூர்முத்து நாகப்பனே

(அ-ரை.) செய்க்கறி - பிள்ளைக் கறி. விடக்கு - இறைச்சி. சம்பாரம் - தாளிதம்.

உரகத்தி லேகிடப் பான்சக்ர பாணி உயர்ந்த கும்ப
கரகத்தி லேகிடப் பான்குறு மாமுனி கன்னியர்கள்
விரகத்தி லேகிடப் பான்காம ராசன் மிகுந்தஎழு
நரகத்தி லேகிடப் பான்கொழு மூர்மூர்க்க னாகப்பனே.

(அ-ரை.) உரகம்-ஆதிசேடனாகிய பாம்பு. கும்ப கரகம்-குடமாகிய கரகம். குறுமுனி-அகத்தியன். விரகம்-காமநோய்.

---

## ௨௦. விளையாட்டால் வந்த வினை

ஏகம்பவாணர் என்பவர் ஒரு பெரும்புலவர். இவர்க்கு ஒருபூதம் தொண்டு புரிந்து வந்தது. இவரையன்றி இவர் மனைவியும் புலமையில் சிறந்தவளாயிருந்தாள். இப்பாவேந்தரிடம் தமிழ்நாட்டு மூவேந்தரும் நட்புடையவர்களாக இருந்தனர்.

ஒருநாள் ஏகம்பவாணர் தம்வயலுக்குச் சென்றிருந்தார். அவ்வமயத்தில் மூவேந்தரும் புலவர் வீட்டிற்கு வந்தனர். வந்தவர்கள் புலவர் மனைவியைக் கண்டு 'ஏகம்பவாணர் எங்கே?' என்று விசாரித்தனர். வயலுக்குப் போயிருப்பதாகக் கூறினாள் அக்கற்பரசி 'வயலுக்கு முடிநடப் போயிருக்கின்றாரோ!' என்று விளையாட்டாக நகையாடிக் கொண்டு சென்றனர் அவ்வேந்தர்.

புலவர் மனைவிக்குச் சினம் மூண்டது. 'என்னுடைய கணவர் நாற்றுமுடியையா நடுவார்! அரசர்களுடைய சேனைகளையெல்லாம் தழையாக்கிச் செந்நீராகிய நீரைத்தேக்கி யானைகளை மிதிக்கவைத்த

சேற்றில் மூவேந்தர்களுடைய முடியையன்றோ பறித்து நடுவார்!' என்று வசையமைந்த கவியைப் பாடினார். சிறிது நேரத்திற்கெல்லாம் ஏகம்பவாணர் வீட்டிற்கு வந்தார். மனைவியார் நிகழ்ந்த செய்தியை அவர்க்கு அறிவித்தார். புலவர் பெருஞ்சினங் கொண்டார். தம்முடைய பூதத்தை ஏவி மூவேந்தர் கட்கும் பலதொல்லைகளை உண்டு பண்ணினார். மன்னர்கள் தம்வாய்க்கொழுப்பால் வந்த வினையை எண்ணி வருந்தினர்.

சேனை தழையாக்கிச் செங்குருதி நீர்தேக்கி
ஆனை மிதித்த அருஞ் சேற்றில்—மானபரன்
பாவேந்தர் வேந்தன் பறித்து நட்டான் ஏகம்பன்
மூவேந்தர் தங்கள் முடி.

(அ-ரை.) குருதி-செந்நீர். மூவேந்தர்-சேர, சோழ, பாண்டியர்.

---

## உக. முன்குடுமிச் சோழியன்

வசைகவிவாணராகிய காளமேகப்புலவர் கும்பகோணத்தில் நடந்த ஒருபார்ப்பன விருந்திலே உட்கார்ந்து உண்டுகொண்டிருந்தார். இவருக்குப் பக்கத்திலே ஒரு சோழியப்பார்ப்பான் உட்கார்ந்து உண்டு கொண்டிருந்தான். அப்பொழுது அந்தச் சோழியப் பார்ப்பானுடைய குடுமி அவிழ்ந்து அவனுடைய இலையிலே விழுந்தது. அதை அவன் எடுத்துப் பக்கத்திலே உதறினான். அவன் குடுமியில் ஒட்டிக்கொண்டிருந்த சோற்றுப் பருக்கைகள்

காளமேகப் புலவருடைய இலையில் வந்து விழுந்தன.

உடனே காளமேகப் புலவருக்குச் சினம் பொங்கிற்று. சுருக்கு அவிழப்பெற்ற முன்குடுமியை யுடைய சோழியா, சோற்றுப் பருக்கைகள் காயப் பெற்ற வாயையுடையாய், புலையா, கும்பகோணத்தி லுள்ள கோட்டானே, நாயே, குரங்கே, வேலை அற்றுப்போய் உன்னையும் ஒருத்தி பெற்றுப் போட்டாளே? என்று அவன்மீது வசைபாடினர்.

பந்தியிலிருந்த அனைவரும் நகைத்தனர். சோழி யப் பார்ப்பான் தன்னுடைய அறிவில்லாச் செய் கையை எண்ணிப் பெரிதும் வருந்தினான்.

சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா புலையா—திருக்குடந்தைக்
கோட்டானே நாயே குரங்கே உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்.

(அ-ரை.) சுருக்கு-முடிச்சு. குடந்தை-கும்பகோணம்.

## உஉ. கட்டுச் சோற்றை இழந்த கவிஞர்

அந்தகக்கவி வீரராகவ முதலியார் தம்முடைய மாணவன் ஒருவனோடு ஊர்ப்பயணம் செய்துகொண்டிருந்தார். செல்லும்போது வழி உணவுக்காகக் கட்டுச்சோற்று மூட்டையொன்றையும் கொண்டுபோயினர்.

போகும் வழியில் இருவரும் ஒருகுளக்கரையை அடைந்தனர். ஆசிரியரைக் கரையில் இருக்கும்படி கூறி மாணவன் குளத்தில் இறங்கினான். ஆசிரியருக்கு அருகில் கட்டுச்சோற்று மூட்டையையும் வைத்துவிட்டுச் சென்றான். கவிராயராகிய ஆசிரியருக்கு இருகண்களும் தெரியா. அதனாலேயே அவருக்கு அந்தகக்கவி என்னும் அடைமொழியும் வந்தது. அவர் சோற்றுமூட்டையுடன் உட்கார்ந்துகொண்டிருக்கும்பொழுது அவ்விடத்திற்கு ஒருநாய் வந்தது. அது கட்டுச்சோற்று மூட்டையை வாயால் கௌவித் தூக்கிக்கொண்டு கடுகி ஓடிவிட்டது.

நாய் கட்டுச்சோற்று மூட்டையைத் தூக்கிக்கொண்டு போய்விட்டதென்பதைப் பின் உணர்ந்த மாணவன் ஆசிரியருக்குத் தெரியப்படுத்தினான். அப்பொழுது கவிஞர் பெரும்பசியோடு இருந்தார்.

அவர் உடனே, 'வயிரவன் ஊர்தியாகிய நாய் வந்து, நான்முகனுடைய ஊர்தியாகிய அன்னத்தை (சோற்றை)த் தூக்கிக்கொண்டு, திருமாலின் ஊர்தியாகிய கருடனைப்போல் பறந்துசென்றுவிட்டது.

அதனல் ஆட்டுக்கிடாவை ஊர்தியாகவுடைய இக் கடவுளானவன் (பசித்தீ) என் வயிற்றைவந்து பற்றிக்கொண்டான்' என்று கூறி நகைத்தார். மாணவனும் உடன் சேர்ந்து நகைத்தான்.

சீராடை யற்ற வயிரவன் வாகனம் சேரவந்து
பாராரும் நான்முகன் வாகனந் தன்னைமுன் பற்றிக்கொண்டு
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினில் பற்றினனே.

(அ-ரை) வயிரவன் வாகனம்-நாய். நான்முகன் வாகனம்-அன்னம் (சோறு). நாராயணன் வாகனம்-கருடன். மை வாகனன் - ஆட்டுக்கிடாவை வாகனமாக உடைய தீக்கடவுள் (பசித்தீ.)

---

## உ௯. வாயடங்கிய வைணவர்.

'வசைபாடக் காளமேகம்' என்று இசைபெற்ற காளமேகப்புலவர் சீரங்கத்திலே இருந்தார். அப்போது அவ்வூர்க் கோயிலொன்றிலிருந்த ஆனைமுகக் கடவுளின் உருவச்சிலை யொன்றிற்கு, அவ்வூர் வைணவர்கள் பட்டைநாமத்தைப் பரக்கச் சாத்தி வைத்திருந்தனர்.

அக்காலையில் காளமேகப்புலவர் அக்கோயிலண்டை வந்தார். வைணவர்கள் அவரைப்பார்த்து, 'திருமாலே மேலாம் பொருள் என்பதற்கு அறிகுறியாகச் சிவனுடைய புதல்வராகிய பிள்ளையாரே நாமம் சாத்திக்கொண்டிருக்கின்றார் பாரும்' என்று காட்டினார்கள்.

வைணவர்களின் குறும்புமிக்க செயலையும், சொல்லையும் உணர்ந்த காளமேகப்புலவர் நீளச் சினங்கொண்டார். 'திருமால் மேலாம் பொருள் என்பதற்காகப் பிள்ளையார் நாமம் சாத்திக் கொள்ளவில்லை. தம்முடைய தந்தையாகிய முக்கணிறைவன் என்றும் இறவாமல் ஒரேபடியாக இருப்பதாலும், தம்முடைய மாமனாகிய திருமால் அடிக்கடி இறந்தும் பிறந்தும் உழல்கிறபடியாலும், மாமனிறக்கும் சமயம் பார்த்து அவனுடைய காணியாட்சியைக் கைப்பற்றிக்கொள்ளலாமென்றே இங்கு வந்திருக்கின்றார்' என்று கூறினார். இதனைக் கேட்ட வைணவர்கள் வாய்க்கொழுப் படங்கி நாணமுற்றார்கள்.

தந்தை பிறந்திறவாத் தன்மையினால் தன்மாமன்
வந்து பிறந்திறக்கும் வன்மையினால்—முந்தொருநாள்
வீணிக்கு வேளை யெரித்தான் மகன்மாமன்
காணிக்கு வந்திருந்தான் காண்.

(அ-ரை.) தந்தை : சிவபெருமான். மாமன் : திருமால். இக்கு வேளை எரித்தான் - கரும்பை வில்லாகவுடைய மன்மதனை எரித்த சிவபெருமான்.

## உச. பெரியார் பெரும்பகை

சிவப்பிரகாச அடிகள் விருத்தாசலம் என்னும் பழமலையில் வசித்து வந்தார். அப்பொழுது அவர் நாள்தோறும் மணிமுத்த ஆற்றிற்குச் சென்று நீராடிவிட்டு வருவது வழக்கம். அவ்வாறு நீராடி விட்டு வருங்காலத்தில் ஒருநாள் ஒரு மாஞ்சோலை யின் வழியாக வந்தார். ஒரு மாமரத்தின் கீழ் ஓரினிய கனி வீழ்ந்து கிடந்தது. அதனைச் சிவவழி பாட்டிற்கு ஆமென்று நினைத்த அடிகள் கீழே குனிந்து அக்கனியைக் கையில் எடுத்தார்.

உடனே, அச்சோலையைக் காவல் காத்துக் கொண்டிருந்த கீழ்மகன் ஒருவன் விரைந்தோடி வந்து, அடிகளின் கையைப் பற்றிக்கொண்டு, 'நீ ஏன் மாங்கனியைத் திருடினாய்? தோப்பிற்கு உரிய என்னுடைய தலைவனிடத்திற்குவா' என்று வம்பு செய்தான். அடிகள் மனம் மிகவும் வருந்திற்று. அவர் அக்கயவன் மீது வசைபாடத் தொடங்கி,

'தொண்டனாகிய மார்க்கண்டனுக்காக நமனை உதைத்துக் கொன்றது உண்மையானால் ஒரு மாங் கனி எடுத்ததற்காக எம் மடியைப் பிடித்து இழுத்த இக்கொடுவினையாளன், கன்னியின் வீட்டிற்கு (ராசிக்கு) ஞாயிறு வரும்பொழுது இறந்தொழியக் கடவன்' என்று கூறினார். அக்காவலாளும் சின் னாளிலே இறந்து ஒழிந்தான்.

நெருப்பாற் சுடப்படினும் ஒருவர் பிழைப்பார்; ஆனால் அறிவுடையார் சினத்தீயால் சுடப்பட்டார் ஒருகாலும் உய்யார் என்பதற்கு, இவ்வரலாறே சிறந்த எடுத்துக்காட்டாகும்.

அடுந்துயருந் தொண்டனுக்கா அந்தகனைத் தாளால்
அடர்த்ததுவுஞ் சத்தியமே யானால் — எடுத்தவொரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்.

(அ-ரை.) தொண்டன் - மார்க்கண்டன். அந்தகன் - கூற்றுவன், அடர்த்தது - கொன்றது. கனி - கன்னிராசி. ஆதித்தன் வர - சூரியன் வரும்பொழுது.

---

## உரு. உன்னைக் கொடுப்பேனே

ஒருகாலத்தில் காளமேகப்புலவர் ஓரூரின் தெரு வழியே போய்க்கொண்டிருந்தார். அவரைக்கண்டு அங்கு விளையாடிக்கொண்டிருந்த ஒரு குழந்தை அஞ்சி அழுதுகொண்டே தன் தாயிடம் ஓடிற்று. குழந்தை அழுதற்குக் காரணம் யாதென்றறிந்த அத்தாயானவள் காளமேகப் புலவரைப் பார்த்து, 'உன்னைக் கொடுப்பேனே' என்று இகழ்ந்தாள்.

இச்சொல் காளமேகப்புலவரின் காதில் விழுந்தது. இயற்கையிலேயே சினமிகுந்த அவருக்கு இச்சொல் அவர் சினத்தைப் பன்மடங்கு மிகுத்தது.

அதனால் அவர் அவ்வாயாடிப் பெண்ணைப் பார்த்து, 'என்னைக் கொடுத்தால் உனக்கு இரக்கம்

உண்டாகுமா? நீ பெற்று வைத்திருக்கின்ற பிள்ளையைத்தானே கொடு' என்று கூறினார். புலவர் 'பிள்ளை சாகவேண்டும்' என்னும் கருத்தோடு 'கொடு' என்று கூறினமையால் அக்குழந்தை உடனே மயங்கி விழுந்து இறந்துவிட்டது.

இந்நிகழ்ச்சியை அறிந்த அப்பெண்ணின் கணவன் ஓடிவந்து புலவரை வணங்கித் தன் மனைவி செய்த குற்றத்தைப் பொறுத்துக் குழந்தையையும் உயிர்ப்பிக்குமாறு பெரிதும் இரந்து வேண்டினன். புலவரும் அவன் வேண்டுகோளுக்கு மனமிரங்கிக் குழந்தையை மீண்டும் உயிர்பெற்றெழுமாறு செய்துவிட்டு அவ்விடத்தைவிட் டகன்றார்.

என்னைக் கோபத்தால் இரக்கமுனக் குண்டாமோ
வன்னக் கமலமுக வல்லியே!—துன்னுமதக்
காட்டானைக் கோட்டுமுலைக் காரிகையே நீபயந்த
கோட்டானைச் சாகக் கொடு.

(கோட்டானைத் தானே கொடு)

(அ-ரை-) வன்னம்-அழகு. கோடு-கொம்பையொத்த. கோட்டான்-கோட்டான் போன்ற பிள்ளை.

---

## உகு. கம்பர் வீட்டுக் கட்டுத்தறி

கல்வியிற் பெரியரெனக் கவின்பெற்ற கம்பரைக் காண்பதற்குச் சோமாசியென்ெருரு புலவர் ஒருநாள் அவர் வீட்டிற்கு வந்தார். அப்பொழுது கம்பர்வீட்டு வேலைக்காரி வரட்டி தட்டிக்கொண்டிருந்தாள். அவள் புலவரைப் பார்த்து, 'நீர் யார்? எங்கு வந்தீர்?' எனக்கேட்டாள். அதற்குப் புலவர் மிகுந்த செருக்கோடு 'யாம் ஒரு புலவரேம்; கம்பரைக் கண்டு அளவளாவுதற்கு வந்தேம்' என்று கூறினர்.

அதற்கு அவ்வேலைக்காரி 'கம்பரைக் கண்டு அளவளாவுவது அப்புறம் இருக்கட்டும்; முதலில் என்னெடு சிறிது அளவளாவும்; உம்முடைய ஆற்றலைப் பார்ப்பேன்' என்ருள்.

இதைக் கேட்ட புலவர்க்குப் பெருஞ்சினம் மூண்டது. 'நீயோ என் ஆற்றலைப் பார்ப்பாய்! எங்கே உன் வாய்த்திறமையைக் காட்டு; பார்க்கலாம்' என்ருர்.

உடனே வேலைக்காரி 'வட்டமான திங்களைப் போல் இருக்கும்; நெருப்புக்கொடி படரும்; கொட்டுகிறவர்கள் கையில் நின்று கூத்தாடும்; சுட்டுவிடுவோமானல் 'அரகரா' என்று எல்லோரையும் சொல்லச்செய்யும்; இவ்வாறு இருப்பது எது என்பதை நன்கு தெரிந்து சொல்லும்; இதற்கு ஒருநாள் கெடு கொடுக்கின்றேன், சோமாசிப்

புலவரே' என்றாள். அவள் வரட்டி தட்டிக்கொண்டிருப்பதைப் பார்த்துங் கூடப் புலவர்க்கு ஒன்றும் விளங்கவில்லை. புலவர் நாணிக் கம்பரைக் காணுமலே கம்பி நீட்டிவிட்டார். கம்பர்வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடுமல்லவா! அங்ஙனமிருக்க வேலைக்காரி புலவரை வென்றதில் வியப்பென்ன இருக்கிறது?

வட்டமதி போலிருக்கும் வன்னிக் கொடிதாவும்
கொட்டுவார் கையிலின்று கூத்தாடும்—சுட்டால்
அரகரா என்றுமே அம்பலசோ மாசி!
ஒருநாள்விட் டேன்ச(து) உரை.

(அ-ரை.) வன்னிக்கொடி — தீக்கொழுந்து. இவ்விடுகவியின் விடை : வரட்டி.

---

## உஎ. புலவர்க் கியாப் புல்லர்

சேதுநாட்டு முதுகுளத்தூரிலே பெரிய சரவணக் கவிராயரென்றொரு புகழ்பெற்ற புலவர் இருந்தார். அவர் பல செல்வர்கள்மீதும் செய்யுள் பாடிக்கொண்டு சென்று பரிசில்பெற்றுப் பெருமையோடு வாழ்ந்து வந்தார்.

ஒரு காலத்தில் இவர் பெருஞ்செல்வம் படைத்த ஒரு பிசினன்மீது பாக்கள் இயற்றிக்கொண்டு சென்றார். இவரைக் கண்டதும் அப்பிசினன் 'வாரும்; நீர் யார்?' என்றான். அதற்கு அப்புலவர் 'நானொரு புலவன்' என்றார். புலவனென்றதும்

அப்பிசினன் மோசம் வந்தது என்று அஞ்சி 'நீர் வந்த காரியம் யாது?' என்று நடுக்கத்தோடு கேட்டான்.

உடனே புலவர், 'சிறப்புப் பொருந்திய காம தேனுவே! கற்பகத்தருவே! சிந்தாமணிக்கு நிகரானவனே! உண்மை சொல்வதில் அரிச்சந்திரனுக்கு ஒப்பானவனே! எம்முடைய வறுமையைத் தீர்ப்பாயாக' என்று புகழ்ச்சியாகப் பேசினர்.

உடனே அப்பிசினன் கடுஞ்சினமடைந்து இரு கண்களும் சிவந்து நீ என்னைப் பார்த்து மாடு (காம தேனு) என்றும், மரம் (கற்பகத்தரு) என்றும், கல் (சிந்தாமணி) என்றும் சொன்னதுமல்லாமல் அரிச்சந்திரனென்று தகாத சொல்லையும் கூறினய். 'நான் யார்க்கு அடிமையானேன்? எவர்க்கு என் மனைவியை விற்றேன்? ஏன் இத்தகைய இழிசொற்களைக் கூறினய்? இவ்வசை என்னைவிட்டு நீங்குமா? நீ புலவன் என்றதனல் நின்னையொன்றும் செய்யாது விடுகின்றேன். உடனே இவ்விடத்தைவிட்டு ஓடிப்போ' என்று கடிந்து கூறினன். பிசினனது பேய்க்குணத்தைக் கண்ட புலவர் அஞ்சி அகன்றார்.

வாரும்நீர் யாரென்ன வித்தவா னென்னவு
மதிமோசம் வந்ததென்றே
வாய்குழறி மெய்யெலா மிகநடுக் குற்றுநீர்
வந்தகா ரியமேதெனச்
சீருலா வியகாம தேனுவே தாருவே
சிந்தா மணிக்குநிகர்வோய்
செப்புவச னத்தரிச் சந்த்ரனே யெனலுஞ்
சினந்திரு கணுஞ்சிவந்தே

அரைநீ மாநிகல் மரமென்று சொன்னது
 மலால்அரிச் சந்த்ரனென்றே
யடாதசொற் சொன்னையே யார்க்கடிமை யாகினேன்
 அர்மையிற் பெண்டுவிற்றேன்
நீருமோ இந்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
 நீயரைப் பாடிநொந்தேன்
திருமன்றுள் நடுநின்று நடமொன்று புரிகின்ற
 தென்தில்லை நடராசனே.

(அ-ரை.) தாரு - கற்பக தரு. பெண்டு - பெண்டாட்டி.

---

## உ௮. பயனில்லாத சாமிகள்

திருமயிலையில் பெருஞ்செல்வராக விளங்கி யிருந்த வேங்கடசாமி என்பவரிடத்தில் இராமச்சந்திரக் கவிராயரென்பவர் பரிசுபெற விரும்பினார். அதனால் அவர் அச்செல்வரை யடைந்து, 'யான் பரிசுபெறும் பொருட்டு முதலில் சிவபெருமானிடம் சென்றேன். அவர் மூங்கில் புதரில் ஒளித்துக் கொண்டார்.* பின் அவ்விடம்விட்டுத் திருமாலிடம் சென்றேன். அவரோ பாற்கடலின் நடுவே, யான் அணுக முடியாதவாறு சென்று படுத்துக் கொண்டார். அதற்குப் பிறகு நான்முகனை யடைந்தேன். அவனோ தாமரைமலரில் புகுந்து ஒளித்துக்கொண்டான். அதன்பின் தகப்பன்சாமி யாகிய முருகப்பெருமானை நாடிச் சென்றேன்.

* சிவபெருமான் மூங்கிலில் ஒளித்த வரலாறு திருநெல்வேலித் தல புராணத்தால் அறியப்படும்.

அவரோ ஒரு மலையிலும் நிலையாய்த் தங்காது ஒவ்வொரு மலைதோறும் உழன்றுகொண்டிருந்தார். இறுதியில் ஆனைமுகவனை யடைந்தேன். அந்த வயிற்றுச் சாமியோ தான் பிறரிடமிருந்து வாங்கி யுண்பதற்காகப் பலர் போகும் வழியில் காத்துக் கொண்டிருந்தான். எல்லாச் சாமிகளுமே இங்ஙன மிருப்பதால், யான் பொன்னப்ப சாமியின் புதல்வரும், வேங்கடசாமி என்னும் பெயருடையவரு மாகிய உம்மைத் தேடி வந்தேன்' என்றார்.

புலவரின் திறமையை யறிந்த வேங்கடசாமியும் தகுந்த பரிசில் அளித்துப் போற்றியனுப்பினார்.

மூங்கிலிலே யொளித்திருந்தான் முக்கண் சாமி
முதியகடற் போய்ப்படுத்தான் முகுந்த சாமி
தாங்கமலப் பொகுட்டுறைந்தான் தலைநாற் சாமி
தடவரையில் உழன்று நின்றான் தகப்பன் சாமி
வாங்கியுண்ண வழிகாத்தான் வயிற்றுச் சாமி
வாணருக்கிங் குதவுவரார் மற்றோர் சாமி
ஓங்கியசீர் மயிலையிற்பொன் னப்ப சாமி
உதவியவேங் கடசாமி யுசித வேளே.

(அ-ரை.) கமலப் பொகுட்டு - தாமரைக் கொட்டை. தலை நால் சாமி - நான்முகன். தடவரை - பெரியமலை. தகப்பன் சாமி - தந்தைக்குபதேசித்த கந்தப்பெருமான். வயிற்றுச்சாமி - ஆனைமுகன். வாணர் - கவிவாணர். உசிதம் வேள் - அழகிய மன்மதன்போன்றவன்.

## உகூ. ஏன் பறக்கிறீர்?

பல ஆண்டுகளுக்கு முன்பு புதுச்சேரியில் ஆனந்தரங்கப்பிள்ளையென்று பேர்பெற்ற ஒரு பெருஞ்செல்வர் இருந்தார். இவர் மிகவும் புகழ் பெற்றவர். அக்காலத்தில் அரசாங்க அலுவல்களி லும் இவர் சிறந்த தலைமைபெற்று விளங்கினர். கல்வியின் பெருமை யறிந்து புலவருக்குப் பரிசில் அளிப்பதிலும் இவர் தலைசிறந்து நின்றார்.

இவரிடம் பற்பல புலவர்கள் வந்து பரிசில்பெற் றுச் செல்வர். பயிர்த் தொழில்களிலும் இவரே முன் னின்று எல்லாக் காரியங்களையும் நடத்துவார். ஒரு கால் இவரது இல்லத்தை நாடி மதுரகவிராயர் என் னும் புலவர் ஒருவர் வந்தார்.

ஆனந்தரங்கர் அறுவடையாகும் வயல்களைக் காணச் சென்றுள்ளார் என்று அறிந்து அங்குச் சென்றார். வயலில் ஓரிடத்தில் நெல் சிந்திக் கிடந் தது. அந்நெல் வீணாகப் போகின்றதே என்று எண்ணிய செல்வர் அவ்விடத்தே உட்கார்ந்து அந் நெல்மணிகளைப் பொறுக்கிக்கொண்டிருந்தார்.

மதுரகவிராயர் அவருக்கு முன்னால் சென்று நின்று, அவரைப் பார்த்துத் தம் வறுமை நிலையி னைக் கூறிப் பரிசில் கேட்டார். பிள்ளையவர்கள் நெல்லைப் பொறுக்கிக்கொண்டே இருந்தார். கவி ராயரோ ஆத்திரப்பட்டுப் பறந்தார். மேலும் அவ ருக்குப் பசிக்கொடுமையும் மிகுதியாக இருந்தது. உடனே ஆனந்தரங்கப்பிள்ளை 'புலவரைப் பார்த்து ஏன் பறக்கின்றீர்?' என்று கேட்டார்.

அதற்குக் கவிராயர், 'மக்களுட் சிறந்தோய், கொக்குப் பறக்கும்; புறாப் பறக்கும்; குருவி பறக்கும்; குயில் பறக்கும்; இவையேயன்றி நக்குப் பொறுக்கிகளும பறப்பர்; நான் ஏன் பறப்பேன்? நின்பக்கத்தில் யான் இருப்பதால் யான் ஒருநாளும் பறவேன் பறவேன்' என்று கூறினார்.

கவிராயரின் கல்வித்திறமையை அறிந்த பிள்ளையவர்கள் பெரிதும் களிப் படைந்தவராய்ப் புலவரை வீட்டிற் கழைத்துச் சென்று சிறந்த உணவளித்துத் தகுந்த பரிசில்களும் வழங்கி வழியனுப்பினார்.

கொக்குப் பறக்கும் புறப்பறக்கும்
குருவி பறக்கும் குயில்பறக்கும
நக்குப் பொறுக்கி களும்பறப்பர்
நானேன் பறப்பேன் நராதிபனே
இக்கு விசயம் செலுத்தியுயர்
செங்கோல் நடாத்தும் அரங்காநின்
பக்கம் இருக்க ஒருநாளும்
பறவேன் பறவேன் பறவேனே.

(அ-ரை.) நக்குப் பொறுக்கிகள் - தெருவில் திரியும் வீணர்கள். நராதிபன் - அரசன்.

---

## ௩௦. புதுவை மன்னரின் புலமை

பல ஆண்டுகளுக்கு முன்பு புதுக்கோட்டைச் சீமையைக் குமரதொண்டைமான் என்பவர் அரசாட்சி செய்துவந்தார். இவர் கல்வியிலும் கவிகள் இயற்றுவதிலும் மிக்க திறம் படைத்திருந்தார். செய்யுட்களின் திறமறிந்து சிறப்புச் செய்வதிலும் சீர்த்தி வாய்ந்தவர். இவருடைய புகழ் எட்டுத்திசையிலும் எட்டியிருந்தது. இவருடைய புகழை யறிந்த ஒரு புலவர் இம்மன்னரிடம் பரிசில்பெற விரும்பினர். அரசர் அவைக்கும் சென்று சேர்ந்தார்.

அரசருடைய அவையிலே பல அறிஞர்கள் நிறைந்திருந்தனர். சென்ற பாவேந்தர் கொலுவீற்றிருந்த பூவேந்தரை நோக்கி, 'அரசர்பெருமானே, ஒருநாள் நான்முகன் உலகில் அவன் திருமுன்னே ஒரு பேரவை கூடிற்று. அப்போது ஆதிசேடன் முதலியவர்களும் மற்றைய விண்ணவர் பலரும் நிறைந்திருந்தனர்.

நான்முகன் அந்த அவையினரை நோக்கி, 'பூவுலகிலுள்ள புதுக்கோட்டை மன்னராகிய குமரதொண்டைமானைப்போல அழகிய தமிழ்ச் செய்யுள் செய்யும் திறம்பெற்றவர்கள் இங்கு யாரே னும் உளரோ? என்று வினவினான்.

அதற்கு மற்றையோர்களைப்போல் தானும் வாளா இராது ஆதிசேடன் மட்டும் எழுந்து நின்று 'யான் இருக்கின்றேன்' என்று கூறினான். அதனைக் கேட்ட நான்முகன் வியப்படைந்து 'எங்கே ஒரு

செய்யுளைப் பாடுக' என்ருன். ஆதிசேடன் எவ்வளவோ முயன்றும் அவனுக்குக் குமரதொண்டைமானைப்போலப் பாடுதற்குஒரு*பதம்கூடவரவில்லை. அதனல் தோல்வியுற்ற ஆதிசேடன் நாணமுற்றுக் கடலிலே விழுந்துவிட்டான். உடனே நான்முகன் சிற்றம் அடைந்து, ஆதிசேடனைப் பிடித்துவரச் செய்து, ஆணவங்கொண்டு பேசிய நாவைப் பிளந்து, காதுகளை அறுத்து, மண்ணை (உலகினை)ச் சுமக்குமாறு வைத்துவிட்டான்' என்று திறம்பட அரசனைப் புகழ்ந்துரைத்தார்.

அரசனும் அவையோரும் புலவரின் திறமையை வியந்து பெரிதும் களிப்படைந்தனர். அரசர் அவ்வறிஞர்க்குத் தகுந்த பரிசளித்து உபசரித்தார்.

புதுவைமுத்துக் குமரதொண்டன் தமிழ்போலக்
　　கவிமதுரம் பொழியப் பாடும்
சதுருண்டோ வெனவிரிஞ்சன் வினவினன்
　　சேடன்நான் தானென் ருனோர்
பதமெனினுந் தோன்ருமல் மால்கொண்டு
　　கடல்வீழ்ந்தான் பதுமன் சீறி
பதமுறுநா வைப்பிளந்து காதறுத்து
　　மண்சுமக்க வைத்திட் டானே.

(அ-ரை.) புதுவை - புதுக்கோட்டை. சதுரர் - வல்லவர். விரிஞ்சன்-நான் முகன். சேடன்-ஆதிசேடன். மால்-மயக்கம். பதுமன் - நான்முகன்.

* பதம்: சொல், கால் என இரு பொருள்படும்; இரட்டுற மொழிதல். ஆதிசேடனுக்கு ஒரு காலும் இல்லையென்றும், பாட்டுப்பாட ஒரு சொல்லும் வரவில்லை என்றும் இருபொருள் படுதல் காண்க.

## கக. கிருட்டிணப்ப நாயக்கன் குளம்

தமிழ் நாட்டின் தனிப்பெருந் தலைநகரமாக விளங்கும் சென்னை நகரத்திற்கு ஒருநாள் மூகவை இராமாநுசக் கவிராயர் என்பவர் வந்தார். அப்பொழுது அவர் கொண்டித்தோப்பிலுள்ள கிருட்டிணப்ப நாயகன் குளக்கரைத் தெருவழியே சென்று கொண்டிருந்தார். அந்தக் குளத்துநீர் பாசிபிடித்துப் பெருநாற்றம் வீசியது. அக்குளத்தில் யாரும் காலைக்கூடக் கழுவமாட்டார்கள். அத்தகைய குளத்தில் அத்தெருவில் வசிக்கும், வீட்டுக்குத் தூரமான பெண்கள் நீராடிவிட்டுத் தத்தம் வீடுகட்குச் செல்வதைக் கண்டார்.

கவிராயர் உள்ளத்தில் அருமையான கற்பனை தோன்றிவிட்டது. தன்னுடன் வருகின்றவர்களைப் பார்த்து, 'இக்கிருட்டிணப்பநாயக்கன் குளம், வீட்டில் இருப்பவர்கள் தன்னிடத்தில் மூழ்கி வீடு அடைந்தால் அது பெருமையாகாது என்று கருதி வீட்டிற்குத் தூரமான பெண்கள் தன்னிடத்தில் மூழ்கி வீட்டை யடையச் செய்கிறது. ஆனால் வான கங்கையோ அவ்வன்மையின்றி வீட்டிலிருப்பவர்களையே, தன்னிடத்தில் மூழ்குவதால் வீட்டை (முத்தியை) அடையச் செய்கிறபடியால், மேற்கண்ட, குளம் தன்னைவிடச் சிறப்புடையது என்று கருதி, அதற்கு அஞ்சி எதிர்நிற்க மாட்டாது சிவபெருமானுடைய சடைக்காட்டில் ஒளிந்துகொண்டது; இத்தகைய குளத்தின் பெருமையை நம்மால் இயம்ப இயலுமோ!' என நகைச்சுவை பொருந்தக் கூறினார்.

இதைக்கேட்டோர் அனைவரும் புலவரின் நுண்ணறிவைப் பாராட்டிப் பெரிதும் மகிழ்வுற்றனர்.

சாராவீ டிருந்தோர் படிந்துசார்ந்
 திடற்கரி தரும்புகழ் தில்லையன்றே வீடு
தாரா மினரும் படிந்துவீ டடையும்
 தோற்றம்மற் றறிந்தத னாலே
வீரவேள் அலைத்த நுதற்கணான் சென்னி
 மேயதச் சுரநதி என்றால்
மாரகன் னொப்ப நாயகன் குலத்து
 மங்கையாம் உரைசெயுந் தகைத்தோ?

(அ-ரை.) வீடு சார இருந்தோர் - தாரமாகாதவர், முத்திவீட்டை அடைதற்கு உரிய பக்குவம் உடையோர். தோற்றம்- பெருமை. வேள் அலைத்த-மன்மதனை எரித்த. நுதற்கணான் - நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான். சென்னி - திருமுடி. சுரநதி - கங்கை. மார - மன்மதனை யொத்த.

---

## ௩௨. ஒரு மாதின் அறிவுக் கலக்கம்

ஒரு பெண் அழகிய பூஞ்சோலை யொன்றில் தோழிகளோடு உலாவிக்கொண்டிருந்தாள். அங்கு ஓரிடத்தில் ஒரு கருவண்டு தேனை மிகுதியாகக் குடித்துவிட்டு மயங்கி விழுந்து கிடந்தது. அதனைக் கண்ட அப்பெண் அஃதொரு கருநாவற்பழமெனக் கருதித் தாமரை மலரையொத்த தனது கையி லெடுத்துப் பார்த்தாள்.

அப்போது அவ்வண்டிற்கு மயக்கம் தெளிந்தது. அவளது அழகிய முகத்தைக் கண்ட அவ்

வண்டு அதனைத் திங்களென்று நினைத்தது. தான் இருக்கும் அவளது கையையும் மெல்லிய தாமரை மலரென்று நினைத்தது.

இவ்வாறு நினைத்த வண்டு 'ஞாயிறு மறையத் திங்கள் தோன்றிவிட்டதுபோலும்; இனி நாம் தங்கியிருக்கும் தாமரைமலரின் இதழ்களும் விரைவில் குவிந்துவிடும்; அவ்விதம் குவிந்துவிடின் நமக்குப் பெருந்தொல்லையாக முடியும்' என்று நினைத்து அச்சங்கொண்டு அவள் கையினின்றும் பறந்துபோய் விட்டது.

தான் கருநாவற் கனியெனக் கருதிய அப்பொருள் பறந்து சென்றதைக் கண்ட அப்பெண் வியப்படைந்து தன் தோழியரை நோக்கி, இஃதென்ன விந்தை; என்னுடைய கையிலிருந்து பறந்து போனது வண்டா? அல்லது கருநாவற் பழந்தான் பறந்ததா? அவ்வாறு பறந்தது பழமேயாயின் இஃதொரு புதுமை இருந்தவாறுதான் என்னே!' என்று வியந்து கூறினாள்.

தேன்நுகர் வண்டு மதுதனை யுண்டு
　　தியங்கியே கிடந்ததைக் கண்டு
தான்அதைச் சம்பு வின்கனி யென்று
　　தடக்கையால் எடுத்துமுன் பார்த்தாள்
வான்உறு மதியம் வந்ததென் றெண்ணி
　　மலர்க்கரங் குவியுமென் றஞ்சிப்
போனது வண்டோ பறந்ததோ பழந்தான்
　　புதுமையோ இதுவெனப் புகன்றாள்

(அ-ரை.) நுகர் - உண்ணும். தியங்கி - மயங்கி. சம்புவின் கனி - நாவற்பழம். தடம் - பெரிய. புகன்றாள் - கூறினாள்

---

## ௧௧. குரங்கும் காகமும்

சான்றோர் மிக்க தொண்டைநாடு பல்வகை வளமும் வாய்ந்து நிறைந்தது. அலைவளமும், மலைவளமும் அடுத்தடுத்துப் பொருந்தியிருப்பது. அவ்வாறு மலையும் கடலும் மண்டி நெருங்கிய ஓரிடத்தில், கடற்கரையில் வாழும் கருங்காக்கையொன்று மலைநிலத்திற்குப் பறந்து சென்றது.

அங்குச் செழித்தோங்கி வளர்ந்த பலாமரமொன்றில், நன்றாகப் பழுத்து வெடித்த பலாக்கனிகள் பல தொங்கிக்கொண்டிருந்தன. அவற்றைக் கண்ட அக்காகம் பொன்னிறமான பலாச்சுளை ஒன்றைத் தன் வாயில் கௌவிக்கொண்டு அரக்கர் தலைவனாகிய இராவணன், இராமன் மனைவியாகிய சீதையைத் தூக்கிக்கொண்டு சென்றதுபோல் தன்னிலமாகிய கடற்கரையை அடைந்தது.

இதனைக் கண்ட குரங்கு, தன் மலையில் இருக்கும் பலாச்சுளையை வேற்றுநிலத்திலிருந்து வந்த காக்கை எடுத்துக்கொண்டு செல்லுதலைப் பொறாதாயிற்று. உடனே சீதையைத் தேடும்பொருட்டு அநுமான் இலங்கைமீது தாவியதையொப்ப அக்குரங்கும் மலையிலிருந்து கடலிலிருக்கும் ஒரு மரக்கலத்தின்மீது தாவி அம்மரக்கலத்தை ஒரு கலக்குக் கலக்கிவிட்டுத் திரும்பிற்று.

குரங்கின் வீரத்தைக் கண்ட காக்கைகள் குலைநடுங்கி வாளா இருந்துவிட்டன.

அலைக்காக மலைச்சாரல் பலாச்சுளையைக்
கவ்வியெழுந் தரக்கர் கோமான்
சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்றால்
எனவங்கஞ் சேரு மந்நாள்
நிலைப்பான மதிலிலங்கை மிசைத்தாவும்
அனுமனைப்போல் நீள்வால் மந்தி
மலைப்பாலின் றலைத்தோணி பாய்ந்துழக்கி
மீண்டெய்தும் வாழ்வும் அங்கணே.

(அ-ரை.) அலைக் காகர் - கடற்காக்கை. அரக்கர் கோமான் - அரக்கர்கட்குத் தலைவனாகிய இராவணன். சிலைத் தாசரதி மனை - வில்லில் வல்ல இராமன் மனைவியாகிய சீதை. வங்கம்-கப்பல். மந்தி-குரங்கு. அலை-கலை.

---

## ௧௪. புரவி வேண்டிய புலவர்

வெறிமங்கைக் கவிராயர் என்னும் புலவருக்குக் குதிரையின்மீது ஏறிச்செல்ல வேண்டும் என்னும் அவா உண்டாயிற்று. புலவருக்குக் குதிரை கிடைக்கவில்லை. குதிரையைப் பெறுதற்கு என்ன செய்யலாமென்று எண்ணிப் பார்த்தார். முடிவில் அவருக்கொரு நல்ல கருத்துத் தோன்றிற்று.

அந்நாளில் இரகுநாத உடையான் என்னும் ஒரு சிற்றரசன் புலவர்கட்குக் கற்பகமரமாக விளங்கி வந்தான். கவிராயர் அவ்வரசனிடம் சென்று மிகத் தந்திரமாகத் தன் கருத்தை வெளியிடத் தொடங்கி, 'ஓ மன்ன, யான் மாட்டின்மீது ஏறுகின்ற சிவபெருமானிடம் சென்று ஒரு சிறு குதிரை தருமாறு கேட்டேன். அதற்கு அப்பெருமான் என் நிலைமைதான் உனக்குத் தெரியுமே,

நமது வீட்டிலே நம்முடைய மூத்தமகனான ஆனை முகனே பெருச்சாளியில் ஏறுகிறான். ஆறுமுகனே காட்டு மயிலில் ஏறிச் சுற்றித் திரிகிறான். வயிரவன் எதன்மீது ஏறிச் செல்கிறான் என்பதை நீயே நேரில் பார்த்துக்கொள் என்று அங்கு நாய்மீது ஏறிநின்ற வைரவனைக் கண்சாடையால் காட்டினார்' என்று கூறி அரசன் முன்னிலையில் அமர்ந்தார்.

புலவரின் உள்ளக்கருத்தை இரகுநாத உடையான் நன்கு புரிந்துகொண்டான். புலவருடைய திறமையைப் பெரிதும் போற்றி ஒரு பரியையும் பரிசாக அளித்தான். புலவரும் அதனைப் பெற்றுத் தன் கருத்து முற்றப்பெற்றார்.

காட்டிலே புகழ்படைத்த ஆவுடையான்
பெற்றரகு நாத! கேண்மோ
மாட்டிலே ஏறுகின்ற சிவனாரைப்
போய்க்குதிரை மட்டங் கேட்டேன்
வீட்டிலே மூத்தமகன் பெருச்சாளி
ஏறுகிறான் வேலன் புன்செய்க்
காட்டுமயில் ஏறுகின்றான் வயிரவனைப்
பாரெனக்கண் காட்டி னாரே.

(அ-ரை.) ஆவுடையான்: இரகுநாதனின் தந்தை. குதிரைமட்டம்: இளங்குதிரை. வயிரவன் வாகனம்: நாய்.

---

## ௩௫. இராகுவின் மயக்கம்

வானளாவிய மாளிகை யொன்றின் மேனிலையில் ஓரழகிய மங்கை நின்றுகொண் டிருந்தாள். அவளுடைய பேரழகு வாய்ந்த முகம் திங்களைப் போல் ஒளிவிட்டு விளங்கிற்று. அம்முகத்தை முழுமதியென்று மயங்கிய இராகு என்னும் கரும்பாம்பானது அதனை விழுங்குதற்கு நெருங்கி வந்தது.

அவ்விராகுவைக் கண்ட அம்மங்கை அஞ்சி அலறிப் புடைத்துக்கொண்டு அப்பால் ஓடலானாள். நெருங்கி வந்த பாம்பு அவளது தோற்றத்தால் மயிலென்று மீண்டும் மருட்சியை யடைந்து, நாம் அண்மையில் நெருங்குவோமானால் அம்மயில் நம்மைக் கொத்திக் கொன்றுவிடும் என்று அஞ்சித் திரும்பி ஓடிப்போய்விட்டது.

என்னே மங்கையின் மாட்சி! நின்றால் திங்களும், சென்றால் மயிலுமாக இராகுவையும் மயக்கினாளன்றோ! இவள் அழகன்றோ அழகு!

மாகமா மேடை மீதில்
    மங்கைநின் றுலாவக் கண்டு
ஏகமா மதியென் றெண்ணி
    இராகுவக் குற்ற போது
பாகுசேர் மொழியி னாளும்
    பதறியே பாதம் வாங்கத்
தோகைமா மயிலென் றெண்ணித்
    தொடர்ந்தரா மீண்ட தன்றே.

(அ-ரை.) மாகம் - வானம் வரையில் உயர்ந்துள்ள. மா - பெரிய. ஏகம் - ஒன்று. பாகுசேர் - வெல்லப் பாகையொத்த. பாதம் வாங்க - பின்விட்டோதுங்க. அரா - பாம்பு.

## ௬௬. மதிமயக்கம்

இரு பெண்கள் கள்ளைக் குடிப்பதற்கு இரு கிண்ணங்களிலே கள்ளை ஊற்றிக் கையில் எடுத்தார்கள். அப்பொழுது திங்களைப்போன்ற அவர்கள் முகமானவை அக்கிண்ணங்களில் இருந்த கள்ளில் உண்மையான திங்கள்களைப்போல் தோன்றின.

அப்பொழுது மதிமயக்கங்கொண்ட ஒரு பெண் கள்ளிற்குள் தெரியும் தன் முகநிழலைக் கண்டு கள்ளைக் குடிக்கவேண்டும் என்னும் அவாவினால் திங்கள்தான் அங்கு வந்திருப்பதாக எண்ணி, 'ஒ திங்களே, யான் என் கணவனோடு ஊடல்கொண்டு வருந்தி இருக்கும் பொழுது நீ என்னை வெம்மை செய்து வருத்தாது இருப்பாயானால் இக்கள்ளினை நினக்கே தருவன்' என்று கூறினாள்.

மற்றொரு பெண் அவ்விதம் கிண்ணத்திற்குள் காணப்பட்ட தன் முகநிழலைப் பார்த்து, 'ஒ திங்களே, நீ நின்னுடைய பகைவனாகிய இராகுவிற்கு அஞ்சித்தானே என்னுடைய கட்கிண்ணத்திற்குள் வந்து புகுந்து ஒளிந்துகொண் டிருக்கின்றாய். ஒருவருக்கு முற்பகலின்கண் துன்பத்தைச் செய்யின், பிற்பகலின்கண் அத்துன்பம் தனக்கே வந்துறும் என்பதை நீ அறியாயா? இனியேனும் கணவனைப் பிரிந்த மகளிர்க்குத்துன்பம் செய்யாது நல்லொழுக்கத்துடன் இருந்து வருவாயாக' என்று அறிவுரைகளைக் கூறினாள்.

இப்பெண்களின் மதிமயக்கப் பேச்சுக்களையெல்லாம் மறைந்திருந்து கேட்டுக்கொண் டிருந்த

இவர்களுடைய கணவர்கள் அவர்களை கையாண்டி செய்து நகைத்தனர்.

கண்மணி வள்ளத் துள்ளே
    களிக்குந்தன் முகத்தை நோக்கி
விண்மதி மதுவின் ஆசை
    வீழ்ந்ததென் றொருத்தி யுன்னி
உண்மயிற் றவளை யூடும்
    நெடுங்காள் வெம்மை நீக்கித்
தண்மதி யாகில் யாரும்
    தருவலிந் நறவை யென்றாள்.

களிக்குங்கண் மதர்ப்ப அங்கோர் கனங்குழை கன்னின் உள்ளால்
வெளிப்படு கின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி
அளித்தனென் அரவம் வானத் தரவினை அஞ்சி நீயக்(கு)
ஒளித்தனை அஞ்சல் என்றங்(கு) ஒளியன உணர்த்து கின்றாள்.

(அ-ரை.) மதர்ப்ப - மேலும் களிப்புற. கனங்குழை - பெண். காட்சி-அழகிய. நிழல்-சாயல். அரவு-இராகு. அஞ்சல், அஞ்சாதே.

(அ-ரை.) மணி வள்ளத்து கள் உள்ளே-அழகிய கிண்ணத்தில் இருக்கும் கள்ளுக்குள். விண் - வானத்திலிருக்கும். ஆசை - ஆசையால். உன்னி-நினைத்து. ஊடும் - பிணக்கும். தண்-குளிர்ச்சி. நறவு-கள்.

## ௧௭. கண்ணனும் யானையும்

ஓர் அரசனுடைய யானைக்கூடத்தில் கட்டப்பட்டிருந்த யானையொன்று கட்டுக்கு அடங்காமல் கட்டுத்தறியையும் பிடுங்கிக்கொண்டு பாகனுக்கு அடங்காது ஓடிற்று. அவ்வாறு ஓடும்பொழுது இடைவழியில் இணைந்திருந்த இரண்டு மாமரங்களின் நடுவே யானையொடு உருண்டு வந்த கட்டுத்தறி சிக்கிக்கொண்டது. ஓடிய யானை பலத்துடன் இழுக்கவே மரங்கள் இரண்டும் வேரோடும் சாய்ந்தன.

இக்காட்சியைத் தூரத்திலிருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மக்கள், யசோதையினால் உரலில் கட்டப்பட்ட கண்ணன் அவ்வுரலையும் இழுத்துக்கொண்டு மருதமரங்களின் இடையே தவழ்ந்து சென்றபோது அம்மரங்கள் ஒடிந்து விழுந்த காட்சியை ஒக்கும்' என்று வியந்தனர்.

பின்னர், பாகன் தன் திறமையால் யானையைக் கட்டுப்படுத்திப் பின்னும் அறுத்துக்கொண்டோடாதபடி பலமாகக் கட்டினான்.

திரண்ட தாள்நெடுஞ் செறிபணை மருதிடை ஒடியப்
புரண்டு பின்வர வுரலொடு போனவன போல
உருண்டு கால்தொடர் பிறகிடு தறியொடும் ஒருங்கே
இரண்டு மாமர மிடையிற நடந்ததோர் யானை.

(அ-ரை.) தாள்-அடிமரம். செறிபணை - நெருங்கிய கிளை. போனவன்: கண்ணன். தொடர் - தொடர்பு பட்டு. பிறகிடு தறி-பின்வரும் கட்டுத்தறி. இற-முறிய.

## ௩௭. நிழல் கண்டு மயங்கல்

இராமனுடைய திருமணம் மிதிலையில் நிகழ்ந்தது. அத்திருமணத்தின்பொருட்டு அயோத்தியிலிருந்து தசரதனும் அந்நகர மக்களும் புறப்பட்டுச் சென்றனர். அவர்கள் வழியில் ஓரிடத்தில் தங்கினர். வழிவந்த வருத்தம் நீங்கும்பொருட்டுப் பலரும் பலவிதமான ஆடல்பாடல்களைப் புரிந்தனர்.

அவர்களுள் சில மங்கையர் அங்குள்ள ஒரு பளிங்குப் பாறையின் மீது படுத்து உறங்கினர். அவர்களுடைய உடம்பின் நிழல் அருகில இருந்த வேறொரு பளிங்குப் பாறையில் தோன்றிற்று. அந்நிழலின் கைகளையும், கால்களையும் தாமரைப் பூவென எண்ணி வண்டுகள் அப்பளிங்குப் பாறையைச் சூழ்ந்து ஒலித்துக்கொண்டிருந்தன. அப்போது அப்பெண்களின் தோழிமார் நிழல்தோன்றிய பாறையிடத்துச் சென்று அந்நிழல்களையே தம் தலைவியர் என்று மயங்கி அவற்றைத் தட்டி எழுப்பினர்.

அவர்களின் அறியாமையைக் கண்ட வேறு சில பெண்கள் கைகொட்டி நகைத்தனர். தாம் ஏமாந்ததை எண்ணி அத்தோழிப்பெண்கள் நாணமடைந்தனர்.

தளங்கொள் தாமரை யெனத்தளி ரடியினு முகத்தும்
வளங்கொள் மாலைவண் டலமர வழிவருந் திளராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையில் தோழிய ரயிர்த்திடத் துயின்றார்

(அ-ரை.) தளம் கொள் - இதழ்களோடும் கூடிய. மாலை - மாலையில் படிந்துள்ள. அலமர-சுழல. அயிர்த்திட-ஐயப்பட.

## ௬௬. கோபுர ஏணி

ஒரு சிறுவனும், அவனுடைய தந்தையும் காஞ்சிபுரத்திற்குச் சென்றனர். அச்சிறுவன் அதற்குமுன் எப்போதும் காஞ்சிபுரத்திற்குச் சென்றதேயில்லை. அந்நகர அமைப்பையும் அழகையும் பெரிய பெரிய தெருக்களையும் பார்த்துக் கொண்டே அந்நகரில் கோயில் கொண்டிருக்கும் ஏகாம்பர நாதரின் திருக்கோயிலை அடைந்தனர். அக்கோயிலின் நீண்டகோபுரம் சிறுவனுக்கு மிக்க வியப்பை அளித்தது அவன் தன் தந்தையைப் பார்த்து, 'இக்கோபுரம் ஏன் இவ்வளவு உயரமாகக் கட்டப்பட்டிருக்கிறது ?' என்று கேட்டான்.

அதற்கு அவனுடைய தந்தை பையனைநோக்கி 'இது ஒரு சாதாரண கோபுரமன்று; இக்காஞ்சி புரத்திலிருந்துகொண்டு ஏகாம்பரநாதரைத் தொழுது வாழுகின்ற மக்கள் அனைவரும் இறந்த பிறகு சிவலோகத்திறகுச் சென்று சிவபெருமானுடைய திருவடிப்பேற்றினை அடைவதற்காக இவ்வளவு உயரமாகக் கட்டப்பட்டிருக்கிறது. அவர்கள் அனைவரும் இக்கோபுரத்தின் வழியாக ஏறியே சிவலோகத்தை அடைவர். அச்சிவலோகத்திற்குச் செல்வதற்கு இஃதோ ரேணியாகும்' என்று கூறினர்.

தந்தை இவ்வாறு கூறியதைக் கேட்டசிறுவன், அவர்கூறியது உண்மைதானென்று எண்ணி மகிழ்ந்தான்.

நச்சிறு நம்பரைத் தொழுது நாள்தொறும்
கச்சியில் வாழ்பவர் இறுதிக் காலையில்
அச்சிவ லோகத்தை அணுக வைத்ததோர்
பொச்சமில் எயிலையப் போலுங் கோபுரம்

(அ-ரை.) நச்சி-விரும்பி. அணுக-அடையும்பொருட்டு. பொச்சம் இல்-குற்றம் இல்லாத.

---

## சo. களை களையும் கடைசியர்

கொழுமைமிக்க வயல்களில் செந்நெற்பயிர்கள் நன்கு வளர்ந்து, நீர்க்களை எடுத்தற்குரிய பருவத்தை யடைந்தன. அப்பொழுது கடைசியர், மயில்கள் வயலழகைக் காண்பதற்கு வந்து கூடியமைபோலக் கூடினர். அவர்கள் வயல்களில் இறங்கி அதில் களையாக முளைத்திருந்த தாமரை, கருங்குவளை, செவ்வல்லி முதலியவற்றைக் களைந்து கரையில் எறிந்தனர்.

பிறகு அவர்கள் களைபிடுங்கிய இடத்தைப் பின்னும் களையுளவோ என்று பார்த்தனர். அப்போது அவர்களுடைய அழகியமுகம் தாமரையைப் போலவும், கண் கருங்குவளையைப்போலவும், செவ்வாய் செவ்வல்லியைப்போலவும் அவ்வயலிலுள்ள தண்ணீரில் தோன்றின. அவர்கள் அவற்றைத் தம் உறுப்புக்களின் நிழல் என்று அறியாமல், பிடுங்கிய களை பின்னும் எவ்வாறுண்டாயினவென வியப்படைந்தனர்.

மேற்கூறப்பட்ட மலர்களில் தங்கியிருந்த வண்டுகள், அம்மலர்களெல்லாம் பறித்துக் கரையில் எறியப்பட்டபின் அப்பெண்களுடைய முகத்தையும், கண்களையும், வாயையும் அம்மலர்களாக எண்ணி அவற்றில் தேனுண்ணுதற்காக மொய்த்தன. அப்போது அப்பெண்கள் அஞ்சி அவ்வண்டுகளைத் தங் கைகளால் ஓட்டியோட்டிச் சலித்தனர்.

செழித்து வளர்ந்த தாமரை முதலியவைகளைச் சிதைக்க வந்த கடைசியரே கடைசியில் மனம் சிதைவுற்று அவ்வயலை விட்டகன்றனர். முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையுமென்பது இந்நிகழ்ச்சியால் விளங்குகிறதன்றோ ?

களமர்கள் களைகளை பருவம் காட்டலும்
இளமயில் வயல்வளம் காண எய்தியாங்(கு)
உளமகிழ் கூர்தர உழத்தி மார்எலாம்
வளமலி பணைதொறும் வந்து முற்றுவார்

(அ-ரை.) களமர்கள் - உழவர்கள்; களைகளை - களையத்தகும் பூண்டுகளைக் களைவதற்குரிய. எய்தியாங்கு - அடைந்ததைப்போல; கூர்தர - மிக. பணை - வயல். முற்றுவார் - சூழ்வார்.

---

## சுக. வீரனுக்குக் கிடைத்த வேல்

தமிழ் மன்னனொருவன் தன்னை இகழ்ந்துரைத்த வடநாட்டரசனொருவனை அடக்கல்வேண்டித் தன் வீரத் தமிழ்ப் படைகளுடன் சென்று போர்தொடுத்தான். இருதிறத்து மன்னர்கட்கும் பெரும்போர் நிகழ்ந்தது. தமிழ்ப் படைஞர் பெருவீரத்துடன் பொருதனர்.

அக்காலையில் தமிழ்வீரனொருவன் எதிரிகளுடன் தனித்து நின்று கொடுஞ்சமர் புரிந்து ஆயிரக்கணக்கான பகைவர்களை அழித்தான். இறுதியாக மதமிக்க யானையொன்று அவ்வீரனை

எதிர்த்து விரிட்டுக்கொண்டு கொல்ல வந்தது. அப்போது அவ்வீரனிடத்தில் ஒரேயொரு கைவேல் மட்டுந்தான் எஞ்சியிருந்தது.

வீரன் தன்னைக் கொல்லவந்த மத யானையின் மேல் அவ்வேலை வீசி அதனை வீழ்த்தினான். அஃதும் இறந்து ஒழிந்தது. பிறகு தன்னிடம் வேறு படைக்கலம் இல்லாமையால் எதிரிகளிடம் பொருவது எவ்வாறு என்று அங்கும் இங்கும் அலைந்து திரியும்பொழுது, முன்செய்த போரில் எதிரிகள் தன்மீது வீசிய வேலொன்று தன் உடம்பில் பொத்துக்கொண்டிருத்தலைக் கண்டு 'வறியவன் புதையலைக் கண்டதே போல' அகமிக மகிழ்ந்து, அவ்வேலைத் தன்கையால் பறித்துப் பிடித்துக்கொண்டவனாய் மேலும் போர்செய்வதில் பெருக்கம் காட்டினான். என்னே வீரனின் போர்த் திறம்! பகைவர் எறிந்தவேல் தன் மெய்யில் நுழைந்ததையும் கவனியாது பொருத தமிழரின் வீரம் இன்று எங்கே?

> கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும்.

(அ-ரை.) களிற்றொடு - யானைமீது. மெய்வேல் - தன் உடம்பில் லதத்துள்ள வேல். பறியா - பிடுங்கி.

---

## சஉ. தவமுனிவர்

ஓர் ஊரிலே ஒரு பெரியவர் இருந்தார். அவர் அந்த ஊரைத் தனக்குரிய ஊராகவுடையவரல்லர். எந்தவூரிலோ இருந்து வந்து அங்குத் தங்கியிருந்தார். அவர் எவ்விதமான காரியமுஞ் செய்வதில்லை. நீராடுதல், கடவுளை வழிபடுதல், உண்டல், உறங்கல் முதலியவைகளைக்கூடத் தாம் விரும்பியபோது தான் செய்வார். எப்பொழுது பார்ப்பினும் ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்துகொண்டிருப்பார்.

அவர் எங்குச் சாப்பிடுகிறார் என்பதுகூட யாருக்குந் தெரியாது. அவர் யாரிடமும் சென்று பசிக்கு உணவு கொடுங்கள் என்று கேட்பதில்லை. எவரேனும், 'பட்டினியாக வுட்கார்ந்திருக்கின்றாரே' என்று நினைத்து ஏதேனும் உணவினை வலியக் கொணர்ந்து கொடுப்பின் அதனைத்தான் உண்பார். இவர் எத்தகைய வுயிருக்கும் எவ்விதமான ஊறும் செய்யமாட்டார்.

இவருடைய போக்கைக் கண்டவர்கள் இவர் ஒரு வேலையற்ற வீணர் என்று எண்ணிக்கொண்டனர். ஒருநாள் சிலர் இவரிடம் சென்று "ஓ பெரியவரே! ஏன் வீண்பொழுது போக்குகின்றீர்? ஏதேனும் நல்ல காரியங்கள் செய்யக்கூடாதா?" என்று கேட்டனர். அதற்குப் பெரியவர் "நான் தவஞ் செய்துகொண்டிருக்கிறேன்" என்று பதில் கூறினார். இவருடைய பதிலைக்கேட்ட அவர்கள் நகைத்து "நன்று கூறினீர்! ஒரு காரியமும் அற்று வீணே உட்கார்ந்திருக்கும் நீர்தாமோ தவஞ்செய்பவர்! நீர் இவ்வாறு கூறினால் நாங்கள் அதனை நம்பிவிடுவேமா?" என்றனர்.

அதற்குப் பெரியவர் அவர்களை நோக்கி, "தவஞ்செய்வது என்றால் என்னவென்று நினைத்துக்கொண்டிருக்கிறீர்கள்? சடைமுடி தாடி முதலியன வளர்த்துக்கொண்டு இருக்கைகள் (ஆசனங்கள்) இட்டு அவற்றின்மீது விறைப்பாக உட்கார்ந்துகொண்டிருப்பதும், காடுகரைகளுக்குச் சென்று காய்கனிகளைத் தின்றுவிட்டு அலைவதும் தான் தவம்செய்வதென்று நினைத்துக்கொண்டிருக்கின்றீர்களா? அன்று; அன்று. இவைகளெல்லாம் உண்மையான தவமாகா. தனக்கு வருகிற பசிப்பிணி முதலியவைகளைப் பொறுத்துக்கொள்ளுதலும், யாதோர் உயிருக்கும் சிறு துன்பமும்

செய்யாமையுமே உண்மையான சிறந்த தவமாகும் இதனை நீங்கள் இனியேனும் உணர்ந்து கொள்ளுங்கள்" என்று அறிவுரை புகன்றார். பெரியவர் கூற்றைக் கேட்டோர் அவர் கூறியதன் உண்மையை நன்குணர்ந்தனர். 'அந்தோ! நாம் இவருடைய சீரிய தன்மையைச் சீர்தூக்கி யறியாது வாய்க்கு வந்தவாறு பிதற்றினேமே!' என்று எண்ணி அப் பெரியவரிடம் மன்னிப்புக் கேட்டுச் சென்றனர்.

> உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
> அற்றே தவத்திற் குரு.

(அ-ரை.) நோன்றல்-பொறுத்தல். உறுகண்-துன்பம். அற்றே-அவ்வளவே. உரு-வடிவம்.

---

## சாங. மூடனும் கயவனும்

கஞ்சிக்குடி என்னும் ஓர் ஊரிலே ஒரு மூடன் இருந்தான். அவன் ஒரு பெருஞ் சோம்பேறி. எவ்விதமான வேலையையும் செய்யமாட்டான். அவன் தனக்குப் பொருள் வேண்டும்போது எளிதில் பெறுவதற்கு ஒருவழி கண்டுபிடித்திருந்தான். அஃதாவது அவ்வூரிலே ஒரு பெருஞ்செல்வன் இருந்தான். அவன் ஒரு பிசினன். எச்சிற் கையால் காக்கையைககூட விரட்டமாட்டான். அயினும் முற்பிறவியின் நல்வினைப் பயனால் அவனுக்குச் செல்வம் மேன்மேலும் பெருகிக்கொண்டிருந்தது. தானும் உண்ணான்; தன் உறவினரையும் உண்ணவிடான்; மற்றுத் தக்கார்க்குந்தர மாட்டான். முற்கூறப்பட்ட மூடன், தனக்குப் பொருள் வேண்டியபோது இக்கயவனிடத்திற்கு வருவான். "யான் உண்டற்கு யாதுமின்றித் தொல்லைப்படுகிறேன்; எனக்கு நிரம்பப் பொருள் தருக; இன்றேல் உன் தாடையை ஓரறையிலேயே பெய்த்தெடுத்துவிடுவேன்" என்று அச்சுறுத்து

வான். கயவன் மறுபேச்சின்றிக் கேட்கும் அளவு கொடுத்துவிடுவான். கொடாது ஏதேனும் சிறிது முரணுவானாயின் 'பளீர்' என்று கன்னத்தில் ஓரறை கொடுப்பான். இரண்டாவது அறை கொடுக்கவேண்டிய வேலையே ஏற்படாது. ஏனெனில், அந்த ஓரறையே அவனால் தாங்கமுடியாததாக விருக்கும். உடனே வேண்டியதை வாரிக் கொடுத்துவிடுவான். அம்முடரன் மிகப் பலமுள்ளவனாதலின் அவனை யாதுஞ்செய்ய வியலாது. மற்றவர்களைக்கொண்டு விரட்டப் பார்ப்பினும் எவரும் அவனிடம் நெருங்கமாட்டார்கள்.

முரடன் தனக்குப் பொருள் வேண்டியபோதெல்லாம் இவ்வாறே செய்தலைக்கண்ட சிலர், "நீ இவ்வாறு ஒழுங்கற்ற முறையிலே பொருள்பறிக்கின்றாயே இஃது அறமா?" என்று கேட்டனர். அதற்கு அம்முரடன் "கயவர்கள், தம்முடைய கன்னத்தையுடைக்கும்படி வளைந்த கையை உடையவர்கட் கல்லாமல் மற்றையோர்க்கு, உண்டபின் கழுவிய ஈரக்கையைத்தானும் உதறமாட்டார்கள்; ஆகையால் அவர்களிடத்தில் பொருள் பெறுவதற்கு இதுதான் தகுந்தவழி என்று சொல்லிக் கொண்டு சென்றான்.

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கையர் அல்லா தவர்க்கு.

(அ-ரை.) ஈர்ங்கை-ஈரமான கை. விதிரார் - உதறார். கயவர் - கீழ்மக்கள். கொடிறு-கன்னம். கூன் கை-வளைந்த கை.

---

## ௪௪. மொட்டைப் புலவர்

பழந்தமிழ் நகரமாகிய மதுரையிலே பல ஆண்டுகட்கு முன்னர் ஒரு தமிழ்ப்புலவர் இருந்தார். அவர் அக்கால வழக்கப்படி குடுமி வளர்த்துத் தலைமயிரை முடிந்திருந்தார். அக்குடுமியில் பேன்பிடித்தல் சடைபிடித்தல் அழுக்குப் பிடித்தல் முதலிய

தொல்லைகளேற்பட்டன. அதனால் குடுமியை வெறுத்த அவர் மயிர் முழுவதையுங் களைந்துவிட்டு மொட்டைத் தலையுடன் விளங்கினார்.

நீண்டகாலம் குடுமியுடனிருந்து திடீரென்று மொட்டை யடித்துக்கொண்டதனால், அவருடைய முகம் அழகிழக்க, வழவழப்பான தலையுடன் அவர் விளங்குவதைக் கண்ணுற்ற வம்பர் சிலர் புலவரை யண்மிப், "பெரியீர்! என் இவ்வாறு மயிரைக் களைந்து அழகைக் கெடுத்துக்கொண்டீர்? பார்த்தற்கு மொட்டைப் பார்ப்பனியைப்போல இருக்கின்றீரே? மயிர் தலைக்கு ஓர் அணியாயிற்றே. அதனைப் போக்கிவிட்டுத் தலையை இவ்வாறு பெரிய உருளைக் கிழங்கைப்போல் வைத்துக்கொண்டிருக்கலாமா?" என்று கையாண்டிசெய்து நகையாடினர்.

இவர்தம் வம்பளப்பைக் கண்ட புலவர், அவ் வம்பர்கட்கு அறிவு புகட்டவெண்ணி; ஓ முடித்தலை மூடர்களே! நீங்கள் மொட்டைத் தலையின் பெருமையை நன்கு உணரவில்லை. தலைமயிரைக் களைந்து தலையை மொட்டையாக வைத்துக்கொள்ளின் அத் தலை வீணாகக் கட்டுப்படாது; அழுக்கடையாது. பெரிய சண்டைகளில் நம்முடைய பகைவர்களால் எட்டிப்பிடிக்க இயலாது. எண்ணெய் மிகுதியாகச் செலவாகாது. இளம்பெண்களது கையினால் இன்ப முறக் குட்டுப்பட்டாலும் 'கணீ'ரென்று ஒலி கேட் கும். ஆதலால் முடித்தலை, மொட்டைத் தலையைப் போல் சிறந்ததாக மாட்டாது' என்று கூறினார். இக்கூற்றைக் கேட்ட அவ்வம்பர்கள் அதில் பல உண்மைகள் இருப்பதை உணர்ந்தும், புலவர் கூறிய போக்காலும், தம் அறியாமையாலும் அவர் கள் நகைத்துக்கொண்டே சென்றனர். இதன் பிறகு எவரும் புலவருடைய மொட்டைத் தலையைப் பழிக்கத் துணிந்திலர்.

கட்டுப் படாதுள் அழுக்கடை யாது கனத்தசண் டைக்(கு)
எட்டிக் கொடாது எவரெனைச்செல் லா(து)இள மாதர்கையால்
குட்டுப்பட் டாலும் கணீரென்று கேட்கும் குவலயத்தில்
மொட்டைத் தலைக்கு நிகரோ முடித்தலை மூடர்களே.

(அ-ரை.) கட்டுப்படாது - முடியப்பெறாது; உரிமையோடிருக்கலா மென்ற ஒரு பொருளும் தோன்றுகின்றது. குவலயத்தில் - இவ்வுலகத்தில். நிகரோ - ஒப்போ? முடித்தலை - முடியப் பெறும் குடுமியை உடைய தலை.

---

## சடு. ஒவ்வொன்றும் ஒழிந்தவகை

சிவனூர் என்னும் ஒரு சிற்றூரில் ஒரு புலவர் இருந்தார். அவர் கல்விச் செல்வம் நன்கு பெற்றிருந்தார். இளமைக்காலந்தொட்டே தாய் தந்தையரால் அருமையாக வளர்க்கப்பெற்ற அவர் உரியகாலத்தில் மணஞ் செய்யப்பெற்றுப் பின் அதன் பயனாக மக்களையும்பெற்று இனிது வாழ்ந்திருந்தார்.

காலக்கடவுள் விரைவாகச் சென்று கொண்டிருந்தது. அதன் வேறுபாட்டால் இப்புலவருடைய தாய் தந்தையர் உற்றார் உடன்பிறந்தார், தனையராகிய அனைவரும் ஒருவர்பின் ஒருவராக இறந்தேகினர். இறுதியாக இவருடைய மனைவியும் இறந்தொழிந்தாள். இவ்வாறு தாய் தந்தையர், மக்கள், உற்றார், உறவினர், உடன்பிறந்தார் மனைவி ஆகிய அனைவரையும் இழந்த புலவர். 'இனி நாம் இல்லத்தில் இருந்து வாழ்வதால் யாது நன்மையுள்ளது? துறவியாகித் தவஞ்செய்தலே தக்கது' என்று துணிந்து தவக்கோலம் பூண்டு இல்லத்தை விட்டு வெளிப்பட்டார்.

அப்போது அவருடைய வீட்டிற்குப் பக்கத்து வீட்டினர் பலர் அவரையண்மிப் பெரியீர்! ஏன் இங்ஙனம் துறவுக்கோலம் பூண்டு புறப்பட்டுவிட்டீர்?

இறக்கும்வரை வீட்டிலேயே இருக்கக்கூடாதா?" என்றனர்.

அதற்குப் புலவர் 'என் தாய் இறந்தபோதே யான் உண்ட அறுசுவையுணவின் நுகர்ச்சியும் அற்று விட்டது. என் தந்தை இறந்தபோதோ எனது கல்விப்பயிற்சியின் வளர்ச்சி முழுவதும் கலைந்து தொலைந்தது. எனக்குச் செல்வமாகத் தோன்றிய என் மக்கள் இறந்தபோதே என் செல்வமும் சிதைந்துவிட்டது. திருவள்ளுவரும் 'தம்பொருளென்ப தம்மக்கள்' என்று கூறினாரன்றோ? மற்று என்னுடைய நல்வாழ்க்கையும் தோள்வலியுமோ என்னுடைய உறவினர்களும் உடன்பிறந்தார்களும் இறந்தபோதே பறந்தோடின.

இனி என் இல்லக்கிழத்தியாகிய என்னுடைய மனைவி இறந்தபோதோ எனக்குளதாய எல்லாவகையான நலன்களுமே இல்லாதொழிந்துவிட்டன. யான் இனி வீணே ஈண்டு உட்கார்ந்திருந்ததலால் யாது நலம் விளையும்? ஆதலின் இங்ஙனம் புறப்பட்டுவிட்டேன்' என்றார்.

இவர்தம் உரையைக் கேட்டோர், அவர்க்கு யாதும் மறுமாற்றங்கொடாது அவர் கூறியது உண்மைதான் என எண்ணி நின்றனர். புலவரும் தம் மனப்போக்கின்படி சென்றார்.

> தாயோ(டு) அறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
> சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—ஆயவாழ்(வு)
> உற்றார் உடன்போம் உடற்பிறப்பால் தோள்வலிபோம்
> பொற்றாலி யோடெவையும் போம்.

(அ-ரை.) சேய்-பிள்ளை. பொற்றாலி-பொன்னால் ஆகிய தாலியையுடைய மனைவி; அருபெயர்.

---